# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – பங்குனி

2021 – மார்ச்



கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்ற கைவல்ய நவநீதம் வேதாந்தப் பாட வகுப்பு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – பங்குனி

2021 – மார்ச்    இதழ் – 105

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

*வன்னி விநாயகர்*

அடைபவர்கள் தவிர்கோசம் கரங்காட்ட

அதற்குஅமை சாதனம் தோள்காட்ட

உடைதருகீழ் அவத்தைவிழி காட்ட மேல்

அவத்தை மத ஊற்றம் காட்ட

நடைகெழு மற்றவர் புரியும் பாவனையை

மருப்பெடுத்து நன்கு காட்டத்

தடைதவிர்பேர் அருள்கொழிக்கும் வன்னி விநா

யகர்மலர்த்தாள் சார்ந்து வாழ்வாம்!

*– கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

இந்தக் கல்வி ஆண்டில் நம்முடைய மாணவச் செல்வங்களின் அறிவை வளர்க்கவோ, சோதிக்கவோ யாருக்கும் வாய்ப்பு கிட்டவில்லை. அனைத்து வகுப்புகளும் இணைய வழியில் நடத்தப்பெற்ற காரணத்தால் அவர்களுடைய புரிந்து கொள்ளும் சக்தியைப் பற்றி நிர்ணயிக்க இயலவில்லை. மேலும் இணையவழி வகுப்புகளை நடத்துவதனாலும் அதன் வழியாக வகுப்புத் தேர்வுகளையும் மாதத்தேர்வுகளையும் நடத்துவதனால் மாணவர்களுடைய கற்கும் திறன், புரிந்து கொள்ளும் திறன், திரும்ப எழுதும் திறன் இவை பற்றி நம்மால் திண்மையாக அறிந்துகொள்ள முடியவில்லை. நம்முடைய ஆசிரியப் பெருமக்கள் இணைய வழி வகுப்புகள் நடத்துவதற்கு வழக்கத்தை விட அதிகமான உழைப்பை நல்கினார்கள் என்பது நன்றாகத் தெரியும்; இருந்தாலும் அந்த உழைப்பினால் பயன் ஏற்பட்டதா என்பதை அறியக் கூடிய வாய்ப்பு நமக்குக் கிடைக்கவில்லை. இது சமபந்தமாக நம்முடைய ஆசிரியப் பெருமக்கள் அனைவருக்கும் ஐயம் இருப்பதை நாம் அறிவோம். இருந்தாலும் முழுமையாக மறந்துவிடாமல் ஒதுக்கிவிடாமல் ஓரளவேனும் தொடர்ந்து கற்க இந்த இணையவழிக் கல்வி உதவியது.

இந்தச் சூழலில் நம் மனதிற்கு ஆறுதலாக நம்முடைய கல்வி நிறுவனங்களில் நடத்தப்படுகின்ற போட்டிகளிலும் இதழ்களிலும் பங்கு கொண்டு தங்கள் திறமையை நம்முடைய குழந்தைகள் அருமையாகக் காட்டி உள்ளார்கள். இச்செய்தி ஓரளவிற்கு நம் வருத்தத்தைக் குறைத்து மகிழ்ச்சியை அளிக்கிறது.

நம்முடைய மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியில் நடைபெற்ற கட்டுரைப்போட்டி, பேச்சுப்போட்டி, ஓவியப்போட்டி, ஒப்புவித்தல் போட்டி, கவிதைப்போட்டி போன்ற பல போட்டிகளில் தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் மிக அருமையான கட்டுரைகள், கவிதைகளை இளம் மாணவர்கள் அளித்திருக்கிறார்கள். அதே போல் நம்முடைய கலைக்கல்லூரியில் நடத்தப்பட்டு வரும் E-Magazine (கணினி இதழ்) அனைத்துத் துறைகளும் பங்கேற்று மாதந்தோறும் வெளியிடுகிறார்கள். அதில் ஆசிரியப் பெருமக்களும் மாணவச் செல்வங்களும் பங்கேற்றுத் தங்கள் படைப்புகளைச் சமர்ப்பிக்கிறார்கள்.

நம்முடைய கல்வி வளாகத்தில் திங்கள் இதழான ஆலமரம் ஜனவரி, பிப்ரவரி (தை, மாசி) மாதத்தில் வெளியிடப்பட்டுள்ளது. இதில் நம்முடைய மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியின் மாணவர்கள் தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் ஒரு கட்டுரை, கணிதம் சார்ந்த அறிவுத்திறனுடன், மாணவர்கள் ஏழு பேர் அருமையான கவிதைகள் எழுதி வழங்கி இருக்கிறார்கள். நம்முடைய தொடக்கப்பள்ளியின் ஆறு ஆசிரியைகள் தங்களுடைய படைப்பைச் சமர்ப்பித்திருக்கிறார்கள். பாலிடெக்னிக் கல்லூரியில் மூன்று ஆசிரியர்களும் மூன்று மாணவர்களும் கலந்து கொண்டு கவிதைகள் சமர்ப்பித்திருக்கிறார்கள். உடற்கல்வியியல் கல்லூரியில் ஒரு ஆசிரியர் கவிதை எழுதி அளித்திருக்கிறார். கலைக்கல்லூரியில் மூன்று முதுகலை தமிழ் மாணவர்களும் ஆறு இளங்கலை தமிழ் மாணவர்களும் கவிதைகள், கட்டுரைகள் அளித்திருக்கிறார்கள். இத்துடன் 12 ஓவியங்கள் அளிக்கப்பட்டு இருக்கின்றன.

இத்துடன் சமீபத்தில் கலைக்கல்லூரித் தமிழ்த்துறை நடத்திய நகரத்தார் வாழ்வும் பணியும் என்ற கருத்தரங்கிற்கு நம்முடைய தமிழ்த்துறை மாணவர்கள் சில கட்டுரைகள் எழுதி அளித்திருக்கிறார்கள். அத்துடன் உலக கவிதை தினம் விழாவில் பல மாணவர்கள் கவிதைப் போட்டியில் கலந்து கொண்டு உள்ளார்கள்.

இவை எல்லாவற்றையும் பார்க்கின்ற பொழுது வாய்ப்புக் கொடுத்துப் போட்டிகள் நடத்தி மாணவர்களை ஊக்குவித்தால் நிச்சயமாக அவர்களுடைய மனத்தில் கற்பனைத் திறனையும், எழுத வேண்டும் என்கிற ஆர்வத்தையும் அதனை அழகாக அளிக்கக் கூடிய திறமையையும் வளர்த்துக் கொள்வார்கள். அவர்களுடைய அறிவுத் திறனை வளர்ப்பது, கற்பனைத் திறனைத் தூண்டுவது, எழுதுவது, பேசுவது போன்ற பல்துறைத் திறமைகளை வளர்ப்பதும் நம்முடைய ஆசிரியப் பெருமக்களாலே திண்ணமாக நிறைவேற்ற முடியும். நீங்கள் தொடங்கி வைத்தால் உங்களைத் தொடர்ந்து வர உங்கள் மாணவர்கள் ஆயத்தமாக உள்ளார்கள். தொடங்குங்கள், வளருங்கள், ஆசிர்வாதங்கள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சுசிவன்ன போதம் (தொடர்ச்சி)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

**100. புணர்ந்த இச்சகத்து ஒழித்து உணர்**
**போதமாம் தனையே**
**உணர்ந்த மற்றது பரன்கனவு**
**எனும்படி உணர்ந்தேன்.**

சூக்கும பூதங்கள் ஐந்தும், அவற்றில் தோன்றிய சூக்கும சரீர சமட்டியுங்கூடி ஈசுவர சூக்கும சரீரம் எனவும், இரணிய கருப்பனென்றும் சொல்லப்படும். யான் சர்வ சாட்சி என்னும் பாவனையை விட்டு (இச்சகத்து ஒழித்து) யான் சாட்சி என்றும் பாவனையை உடைய நிலை ஈசுவர சொப்பனமாம்.

**101. சான்று சாக்கியம் இறந்திடத்**
**தான்இருந் தமையும்**
**தோன்று உறாஇடம் பரன்சுழுத்தி**
**அதுஎனத் துணிந்தேன்.**

இந்தத் தூல சூக்குமமாகிய இரண்டின் வாசனையுடனே கூடியிருக்கின்ற மாயை ஈசுவர காரண சரீரம் என்றும் அவ்வியாகிருதம் என்றும் சொல்லப்படும். யான் சாட்சி என்னும் பாவனையும் விளங்காத அவஸ்தை ஈசுவர சுழுத்தியாம். சுழுத்தி அனுபவம் ஒன்றும் விளங்கவில்லை.

**102. மரித்தது என்றுஉணர்ந்து உரைத்தது**
**மரித்தஇடம் தனிலே**
**தெரித்த போதம் ஏது அதுபரன்**
**துரியமாய்த் தெளிந்தேன்.**

ஈசுவர சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்றுஅவத்தைகளிலும் (சீவதுரியமாகிய சாட்சியை) பிரம்ம ரூபமாய்க் கருதிய போது (கூடஸ்தனே) பிரம்மம் என ஏகத்துவம் உணரவில்லை. ஈசுவர துரியத்தில் ஏகத்துவம் விளங்கும் ஆனாலும் சிறிது ஐயம் இருக்கும். சத்ரூப சத்தி சித்ரூப சத்தி ஆனந்தரூப சத்தி என்னும் சரீரத்திரயமும் பரிபூரணன், தேஜோமயன் பரமானந்தன் என்னும் அபிமானித்திரயமும் சர்வ வியாபகம் சர்வப் பிரகாசம்

சர்வானந்தம் என்னும் அவத்தாத்திரயமும் சுத்தப் பிரம்மமும் ஆகிய பத்தும் அஸிபதத்திற்கு வாச்சியம், தேவனும் சுத்தப் பிரம்மமும் இலட்சியம்.

**103. இறை எனும்பொருள் துரியமே**
**என்னைஆண் டவனே**
**மறையின் அந்தநல் பதப்பொருள்**
**நனவுஎன மதித்தேன்.**

இந்தத் தேஜோமயர் சத்ரூப சத்தியோடு கூடிச் சர்வ வியாபகம் என்னும் சாக்கிர அவஸ்தையை அடைகின்ற போது, அவருக்குத் தேஜோமயர் என்னும் பெயர் போய் பரிபூரணர் என்னும் பெயர் வந்தது. கயிற்றை அறிந்தவுடன் அதில் தோன்றிய பாம்பு வடிவம் அந்த அதிஷ்டான கயிற்றின் வடிவமே என்று உணர்வதைப் போல, பிரம்மமாகிய தன்னிடத்தில் கற்பனையாகச் சமட்டி வியட்டி வடிவச் சர்வ பிரபஞ்சமும் தோன்றுகிறது என்று உணர்ந்து. பின்னர் அவ்வதிஷ்டான வடிவ பிரம்மமாய் அறியும் நிலை. (சாக்கிரத்தில் கூடஸ்தப் பிரம்மங்களின் ஐக்கியம் உண்டு. சொப்பனத்தில் அதிஷ்டான அத்யஸ்தங்களின் ஐக்கிய அனுபவம் உண்டு)

**104. பண்டை விச்சுவ வாதனைப்**
**பழுதுபோய் முழுதும்**
**கண்ட கண்ணதே ஆகிய**
**கனவதும் கண்டேன்.**

யாவும் சின் (அறிவு) மாத்திரமாக விளங்குவதே பிரம்ம சொப்பனம் எனக்கூறுதல். (இந்தப் பரமானந்தர் சித்துரூப சத்தியோடு கூடிச் சர்வப் பிரகாசம் என்னும் சொப்பன அவஸ்தையே அடைகின்ற போது அவருக்குப் பரமானந்தர் என்கிற பெயர் போய் தேஜோமயர் என்னும் பெயர் வந்தது)

**105. காட்சி யாவையும் கண்ணது ஆய்**
**அக்கணும் கரந்த**
**மாட்சி ஆகிய அகோசரம்**
**உறக்கமாய் மதித்தேன்.**

நாமரூபங்களைப் பிரம்ம வடிவமாய்க் கண்ட விருத்தியும்

ஒடுங்கிய நிலை சுழுத்தி. காரணமான ஆனந்த ரூப சத்தியோடு பரப்பிரம்மங்கூடி சர்வ ஆனந்தம் என்னும் சுழுத்தி அவத்தையை அடைகின்ற போது அதற்குப் பரப்பிரம்மம் என்கிற பெயர் போய் பரமானந்தர் என்கிற பெயர் வந்தது.

**106. அரும்த வாமறை அந்தம் ஆம்**
**அகோசரம் தனில்நீ**
**இருந்த ஆறுஅறி வித்தஆறு**
**எங்ஙனம் இசைப்பேன்.**

சுத்தப் பிரம்மமாய் இருப்பது இவ்வஸ்த்தையை விவரமாகக் கூற இயலாமையின் எங்ஙனம் இசைப்பேன். சிரவண மனைத்திற்குப் பின் நிதித்தியாசனம் செய்பவர்கள் நிட்டை கூடி, உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரமத்தை அனுபவிக்கின்ற நிலைகளின் வேறுபாடுகளாம்.

**107. எம்பி ரான்இடம் தொறும்இடந்**
**தொறும்அது அதுவாய்த்**
**தம்பிரான் நடம்செ யும்வகை**
**சாற்றுமாறு அறியேன்.**

அவ்வஸ்தையில் விளங்கும் பொருள்கள் : சாக்கிரத்தில் ஸ்திரவிஷயம், சொப்பனத்தில் அஸ்திர விஷயம், சுழுத்தியில் அஞ்ஞானம், துரியத்தில் துவம்பத லட்சியம், ஈசுவர சாக்கிரம் முதலிய அவஸ்தைகளில் அகண்ட பரிபூரண சச்சிதானந்தப் பிரம்மம்.

**108. ஆவி யேஅடி யேன்செய்கைம்**
**மாறுஉனக்கு என்எனில்**
**பாவி யேனது தானும்உன்**
**னுடையதாம் பண்டே.**

எனது உயிராகிய குருநாதரே முக்தியை அளித்த பேருபகாரத்திற்கு அடியேன் செய்கின்ற பிரதி உபகாரம் தேவரீர்க்கு என்ன என்றால் என்னை அடிமை கொண்ட அன்றே பாவியாகிய எனது உடல், பொருள், ஆவி மூன்றும் தங்களுடையது என்று சசிவன்னன் கூறினான்.

**109. ஆவல் செய்துஎனது ஆக்கைஉள்ள**
**அளவுநின் அடியார்க்கு**
**ஏவல் செய்வதே அன்றிமற்று**
**ஒன்றுநான் அறியேன்**

அடியேனது உடல் இருக்கும் அளவும், தேவரீரது தொண்டர்களுக்கு அன்பு கொண்டு பணி விடைகள் செய்வதே கைம்மாறு அன்றி வேறு ஒன்றையும் கைம்மாறாக நான் உணரவில்லை. ஆதலின் இதையே கைம்மாறாகக் கொள்ள வேண்டும்.

**110. இறவுஇல் எப்பத மும்பெற**
**வேண்டிலேன் என்றும்**
**பிறவி வேண்டுவன் நின்திருப்**
**பணிசெயப் பெறினே.**

தேவரீருக்குச் சிறந்த பணிவிடைகளைச் செய்யும் பேறு பெற்றால் அழிவின்றி எந்த முத்தியையும் பெற விரும்பேன்; பிறவியை விரும்புவேன், குருவின் பணிவிடையால் தான் ஞானம் பெற்றதை மறவாததால் சசிவன்னன் குருபணியைச் செய்ய விரும்புகிறான் என்பது கருத்து.

**111. என்றுபல கால்விழும் எழும்தொழும்**
**அழும்புரியும் என்னை இனியான்**
**நின்றுபல வாகஉரை செய்தஅவன்**
**அன்பினொடு நெஞ்சுஉருகியே.**

ஆசிரியர் சந்நிதியில் நின்று இவ்வாறு பலவிதமாய்க் கூறிய அந்த சசிவன்னன் அன்பினால் மனமுருகி இனிமேல் யான் செய்வது ஒன்றும் இல்லை என்று கூறிப் பலமுறை நமஸ்கரித்தான், எழுந்து நிற்பான், மீண்டும் நமஸ்கரிப்பான். ஆனந்தக் கண்ணீர் சொரிவான். அனுபவத்தினால் ஆனந்தம் பெற்ற சசிவன்னன் அதன் வெளிப்பாடாக வணங்குகிறான், உருகுகிறான்.

**112. ஏட்டில்அறிவு இன்றிஇறை தன்னில் அறிவு**
**இன்றிஇவ் உடம்பினுடனே**
**வீட்டில்உறை வானைஇனி வீடுபெறும்**
**என்பதுவி எம்பிகிலேமே.**

சாத்திரங்களால் அறிந்த பொருளைச் சிந்திக்காமல் தத்துவ ஞானமும் ஈசுவரன் வேறு தான் வேறு என்ற சிந்தனையும் இல்லாமல் இத்தேகத்துடனே சர்வதுக்க நிவர்த்தி, பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தின் கண் இருக்கும் சசிவன்னன் தேகம் நீங்கிய பிறகு முத்தியைப் பெறுவன் என்று கூறுவது பொருந்தாது.

**113. வஞ்சவலி யால்நரகில் வீழ்பிதிரர்**
**அந்நரகு பாழ்படமிகா**
**விஞ்சைவலி யால்அடைய ஏறினர்**
**சுராதிபர்கள் மேல்உலகமே.**

சசிவன்னன் மோட்சம் அடைந்த புண்ணியத்தின் மகிமையை இவ்வாறு விளக்குகிறார். முதலில் பாவ வினையால் அவன் குலத்தினர் நரகம் சென்றனர் எனக் கூறினார். புண்ணியத்தின் மிகுதியும் இப்பிறவியிலேயே பலன் தரும் என்பதால் நரகத்திலிருந்து சசிவன்னன் வம்சத்தினர் மேல் உலகம் சென்றதைக் கூறினார்.

**114. தேவரும்ம னித்தரும்இ வன்தொழில்**
**வியந்துரைசெ யப்படுவதோ**
**மூவரும்வ ணங்கிமுடி யால் அவனது**
**ஏவல்செய முந்துவரே.**

அயன், மால், உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் தமது சிரம்தாழ்த்தி வணங்கி அந்தச் சசிவன்னனுக்குச் சேவை செய்தற் பொருட்டு நான் நான் என முந்துவார்கள், இங்ஙனமானால் இந்திரன் முதலிய தேவர்களும் அரசன் முதலியவர்களும் (மனிதர்களும்) இந்த சசிவன்னனுக்குச் செய்த சேவை அதிசயித்துச் சொல்லத் தக்கதா! அன்று. இப்படிச் சசிவன்னன் அடைந்த ஞானம் அருமையானதால் அவனுக்கு எல்லோரும் பணிசெய்ய முற்பட்டதாகக் கூறி ஞானியின் பெருமையை விளக்குகிறார்.

**115. ஞானியைந ரன்சுரன்எ னாதுஒழிக**
**ஞாலம்உய நாதன்அருளால்**
**மேனியது கொண்டுதனை நல்கவரும்**
**என்று அறையும் வேதமுடியே.**

உலகத்தார் உய்யும் பொருட்டு (இறைவனே) காரணப் பிரம்மமே கருணையினால் திருமேனியைத் தாங்கிக் கொண்டு தற்சொரூபத்தை

அனுகிரகிக்க எழுந்தருளும் என உபநிடதங்கள் கூறும். தத்துவ ஞானியை மனிதன் எனவும், தேவன் எனவும் கூறாது விடுக. (நாதன் மும்மூர்த்திகளுக்கு இறைவன்) அருவனாகிலும் அன்பர்க்கு உருவனாய் வருவன் என்பது மாமறை சொல்லுமே என்று முதலில் கூறிய காளிதேவி அதனை மீண்டும் இங்கு நிச்சயமாய்க் கூறுகிறாள்.

***சசிவன்ன போதம் முற்றிற்று***

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 7. திருக்கண்டியூர்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்யதேசங்களுள் ஏழாவது திவ்யதேசம், திருக்கண்டியூர். சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது ஏழாவது திருத்தலமாகும்.

இத்தலத்தின் வரலாறு திருக்கரம்பனூர்த் தலவரலாற்றின் தொடர்ச்சியாகும். சிவனுக்கு ஈசானம், தத்புருஷம், அகோரம் வாமேதேவம், சத்யோஜாதம் என்று ஐந்து திருமுகங்கள் உண்டு. சிவனைப் போலவே ஐந்து தலைகளுடன் இருந்த பிரம்மாவைக் கண்டபார்வதி தேவி, அவரைத் தனது கணவன் என நினைத்துப் பணிவிடை செய்தாள். இக்குழப்பத்தைத் தீர்ப்பதற்காக, சிவபெருமான், பிரம்மாவின் ஒருதலையை மட்டும் கிள்ளி எடுத்தார். இதனால் பிரம்மாநான்முகன் ஆனார். சிவனுக்குப் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டு, பிரம்மாவின் கபாலமும் அவரதுகையுடன் ஒட்டிக் கொண்டது. அவருக்குப் படைக்கப்பட்ட உணவுகள் அனைத்தையும் கபாலமே எடுத்துக் கொண்டது. எவ்வளவு உணவு இட்டாலும் கபாலம் மட்டும் நிறையவில்லை. பசியில் வாடிய சிவன், அதனைப் பிச்சைப் பாத்திரமாக ஏந்திக் கொண்டு பிச்சாடனார் வேடத்தில் பூலோகம் வந்து பலதலங்களுக்கும் சென்றார். அவர் கரம்பனூருக்கு வந்த போது, பெருமாள், சிவனின் பாத்திரத்தில் பிச்சையிடவே அது பூரணமாக நிரம்பிச் சிவனின் பசி நீக்கியது.

பாத்திரம் நிறைந்து பசித்துயர் ஓய்ந்த போதும் மண்டையோடு மட்டும் கையைவிட்டு நீங்காமல் இருக்கவே, கரம்பனூரில் இருந்தே சிவபெருமான் திருமாலை நினைத்து வழிபட்டார். அப்போது திருமால்

சிவபெருமானைக் கண்டியூர் வந்து பத்மதீர்த்தத்தில் நீராடி அங்கே எழுந்தருளியுள்ள கமலவல்லி நாச்சியாரையும் தன்னையும் வழிபட்டால் கையைவிட்டுக் கபாலம் அகலும் என்று கூறினார். அவ்வண்ணமே கண்டியூர் வந்து தீர்த்தத்தில் நீராடி எழுந்ததும் கபாலம் அகன்றது.

இவ்வாறு அரனாகிய சிவனின் சாபத்தைத் தீர்த்ததால், இங்குள்ள மூலவர் ஹரசாபவிமோசனப் பெருமாள் எனப்படுகின்றார்.

சிவனுக்கு கண்டீச்சுவரர் என்றொரு பெயர் இருப்பதால், அவர் சாபந்தீர்ந்த நினைவாக இத்தலம் கண்டியூர் என அழைக்கப்படுகின்றது.

சிவன் தனது கையில் ஒட்டிக்கொண்ட பிரம்ம கபாலம் நீங்கியதற்குத் திருமாலுக்கு நன்றி தெரிவிக்கும் முகமாகத்தானும் இவ்விடத்தேகோயில் கொண்டார். எனவே இதுஒரு மும்மூர்த்திதலமாகும். பிரம்மனுக்குக் கோயில் கிடையாது என்பதால், இங்கு சரஸ்வதி சமேதராக பிரம்மன் அருள்பாலிக்கின்றார்.

மூலவர் : ஹரசாபவிமோசனப் பெருமாள்

உற்சவர் : திருக்கமலநாதர்

தாயார் : கமலவல்லித் தாயார்

கோலம் : கிழக்கே நின்ற திருக்கோலம்

தீர்த்தம் : கபாலமோட்ச புஷ்கரிணி, ஹத்யாவிமோசன தீர்த்தம் மற்றும் பத்மதீர்த்தம் என்ற பலி தீர்த்தம்

விமானம் : கமலாக்ருதி விமானம்

நீதிமன்றங்கள் தரும் தண்டனையைவிட அவரவர் செய்த கர்மத்தினால் விளைந்த பாவத்திற்கான தண்டனையை அவரவர்களே அனுபவித்துக் கழித்திட வேண்டும் என்ற தண்டனையானது மிகமிகக் கடுமையானது என்பதன் வாழ்வியல் உண்மையினை உணர்த்தும் அற்புதத் திருத்தலம் இதுவாகும்.

இத்தலத்தை திருமங்கையாழ்வார் மட்டுமே ஒரு பாடலால் மங்களாசாசனம் செய்துள்ளார். இக்கோயிலில் இரண்டு பிரகாரங்கள் உள்ளன. இங்குள்ள இராஜகோபுரம் மூன்று நிலைகளைக் கொண்டது.

இத்தலம் தஞ்சையில் இருந்து திருவையாறு செல்லும் வழியில் 10

கி.மி. தொலைவில் உள்ளது. என் அய்யா காப்பியக் கவிஞர். நா.மீனவனார், திருக்கண்டியூர் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. இந்த க்ஷேத்திரம் பஞ்சகமல க்ஷேத்திரமென்றும் அழைக்கப்படுகின்றது. இங்கு கமலாரண்ய க்ஷேத்திரம், கமலா புஷ்கரணி, கமலாக்ருதிவிமானம், கமலநாதன், கமலநாச்சியார் என ஐந்து கமலங்கள் உள்ளன. திருக்கமலநாதன் கமலவல்லி நாச்சியாருடன் அமர்ந்திருக்கும் இத்திருக்கண்டியூரைத் தொழுதால், சிவனுக்கு வினை அகன்றது போல், தொழுபவர்களின் அனைத்து வினைகளும் தேய்ந்து போகும் எனக் கூறும் முதலாம் பாடல் :

திருக்கமலநாதன் கமலவல்லி உடனமர்ந்த
திருக்கண்டியூர் தொழுதால் தேயும் வினைஎன்பர்
மருக்கொண்ட துளவத்தார் மணிமார்பன் நமக்கெல்லாம்
அருட்கொண்டல் ஆகியே ஆதரிப்பான் வணங்குதுமே.

2. குடமுனியாம் அகத்தியர் ஒரு சிறந்த சிவபக்தர். இவருக்குப் பெருமாள் காட்சிகொடுத்து உள்ளார். உபரிசரவசு என்ற மன்னன், குரு.சுக்கிரன் ஆகியோர் திருமலையில் தவம் இருந்தார்கள். அப்பொழுது அங்கு அகத்திய முனிவர் வருகை புரிந்தார். அனைவரும் ஸ்வாமி புஷ்கரணிக்குச் சென்று நீராடித்தவம் புரிந்தார்கள். அப்பொழுதுவானில் கோடி சூரிய ஒளியுடன் வேங்கடப் பெருமாள் காட்சி தந்தார். அவரது ஒளி பொருந்திய விஸ்வரூபத்தைக் கண்டுகண்கள் கூசுவதால், சாந்தரூபத்தைக் காண வேண்டும் என அகத்தியர் கேட்க, சாந்தஸ்வரூபமாக அகத்தியருக்குப் பெருமாள் காட்சி தந்து அருளினார். அவ்வாறு சிவபக்தரான அகத்தியருக்கு அருள் செய்த பெருமாள், நம்முடைய செயல்களையும் பகுத்தறிந்து பயன் கொடுப்பார். அவர் இருந்து அருள்கின்ற கண்டியூரை மனத்தில் கொண்டவர் அருள் பெறுவார் எனவும், அவனடியை எப்பொழுதும் மனத்தில் கொண்டவர் மகத்துவம் அடைந்தவர் எனவும் கூறும் இரண்டாம் பாடல் :

அகத்தியனாம் குடமுனிக்கே அருள் செய்தான் நம்செயல்கள்
பகுத்தறிந்து பயன்கொடுப்பான் பார்த்தருளும் கண்டியூர்
அகத்துடையார் அருள் பெறுவார் அவனடியைத் தவறாமல்
அகத்துடையார் மகத்துவத்தை யாரிங்கே அறிவரம்மா!

3. கையில் கபாலம் ஒட்டியதும், சிவன் திருமாலிடம் வேண்டினார். அப்பொழுது திருமால், நீர் இந்த பூலோகத்தை வலம் வந்து, எங்கெங்கே எனக்குக் கோவில்கள் இருக்கின்றதோ, அங்கெல்லாம் போய்த் தீர்த்தத்தில் நீராடி, எட்டெழுத்து மந்திரம், அதாவது அஷ்டாக்ஷரம் ஜெபித்து கருவறை விமானத்தைப் பார்த்தபடி வலம் வந்து, மூலவரைத் தரிசனம் பண்ணிக்கிட்டேவாரும் என்றார்.

உமக்குத்தான் கணக்கு வழக்கே இல்லாமல் எக்கச்சக்கமா கோவில்கள் இருக்கே! எல்லாத்தையும் முடிச்சுட்டுவர்றதுக்குள்ளே பாலத்தின் கனத்தால் கையே ஒடிஞ்சு விழுந்துருமே! என்று சிவன் புலம்பினார்.

அப்ப ஒன்னு செய்யும். என் கோவில்களில் திவ்யம், ஸைத்தம், ஆர்ஷம், ஸ்வயம்விக்தம் என நாலுவித அம்சங்கள் இருக்கும். இதெல்லாம் அமைஞ்ச திவ்ய தேசங்கள் 106 பூலோகத்தில் இருந்தாலும், இதுலே முக்கியமானது எட்டே எட்டுதான். அதுக்கு மட்டுமாவது போய்வர முடியுமா? எனத் திருமால் கேட்டார்.

சரி. எட்டே எட்டுன்னா பிரச்சனை இல்லை. எந்தெந்த ஊர் என்று சீக்கிரம் சொல்லும். அப்படிச் சென்றுவந்தால் கண்டிப்பாகப் பாவவிமோசனம் ஆகிவிடும் தானே? எனச் சிவபெருமான் கேட்டார்.

பத்ரி, நைமிசாரண்யம், புஷ்கரம், அஹோபிலம், ஸ்ரீரங்கம், ஸித்தி க்ஷேத்ரம், திருக்குடந்தை, கண்டன க்ஷேத்ரம், அங்கேயெல்லாம் நான் சொன்ன மாதிரியே அங்கிருக்கும் தீர்த்தத்தில் மூழ்கி எழும் போது, கபாலத்திலும் தீர்த்தத்தை நிரப்பிக்க வேண்டும். அப்பொழுது அது அசைந்து கொடுத்தால் அதுதான் பாபவிமோசனம் ஆகுமிடம் என்றார் திருமால்.

கண்டன க்ஷேத்திரம் என்பது கேள்விப்படாத ஒன்றாக இருக்கின்றதே எனச் சிவன் கேட்க, ஒரு கோவில் விசேஷமாக இருக்க வேண்டுமென்றால், அங்கு பெருமாள், தாயார், விமானம், புஷ்கரணி, க்ஷேத்ரம் என்ற ஐந்தும் ஒன்றாகச் சேர்ந்து இருக்க வேண்டும். 106 திவ்ய தேசங்களில் அவ்வாறிருக்கும் தேசங்கள் இரண்டே இரண்டு தான். ஒன்று திருச்சேறை. மற்றொன்று திருக்கண்டியூர். இத்தலத்தை

நினைத்தாலே பாவங்கள் நாசமாகிவிமோசனம் கிட்டும் என்பதால் கண்டியூருக்குக் கண்டன க்ஷேத்திரம் என்றபெயரும் உண்டு. சீக்கிரம் கிளம்புங்கள், நலம் உண்டாகட்டும் என்றார் பெருமாள்.

அவ்வாறே சிவபெருமானும் வரிசைக் கிரமப்படிவடக்கிருந்து ஆரம்பித்து தெற்கேகடைசியாகத் திருக்கண்டியூர் வந்து சேர்ந்தார். இதுவரை ஏழு இடத்திலும் அசைந்து கொடுக்காதகபாலம் இங்குள்ள கமல தீர்த்தத்தில் முழுகி எழுந்ததும், மெதுவாக அசைந்தது. தீர்த்தம் கபாலத்தில் நிரம்பியதும், கையைவிட்டுக் கழண்டு அதே தீர்த்தத்தில் விழுந்தது அந்தக் கபாலம். தீர்ந்தது அரனின் சாபம். அத்தீர்த்தம் கபால தீர்த்தம் ஆயிற்று. அந்த உயர்ந்த தீர்த்தம் அமைந்திருக்கும் திருக்கண்டியூரைப் போற்றச் செய்யும் மூன்றாம் பாடல் :

***கையிலே ஓடேந்தும் கண்ணுதலான் கையோடு***
***மெய்யாக நீங்கிடவே மேன்மை செய்த காரணத்தால்***
***உய்யவரு கபால உயர்தீர்த்தம் அமைந்திருக்கும்***
***செய்யதிருக் கண்டியூர் சேருவார் வாழுவரே.***

4. மகாபலி சக்கரவர்த்தி ஒரு சமயம், பெருமாளுடைய ரத்தின கிரீடத்தை அபகரித்ததும், அவருக்கு ஸ்வர்ணதேயம் என்னும் பாபம் வந்து சேர்ந்து சித்தப்ரமை பிடித்து, தேசம் தேசமாகச் சென்று, இங்கேவந்து பெருமாளைச் சேவித்து,

***கோவிந்ததேவே சஹரேமுராரே***
***முகுந்தக்ருஷ்ணாச்யுத பத்மநாப***
***தாபத்ரயச் சேதகவிஸ்வ மூர்த்தே***
***மாம்பாலய ஸ்வாசுக ஜேந்த்ரபந்தோ,***

என்று ஸ்தோத்திரம் செய்ததும், பெருமாளே தரிசனம் கொடுத்துத் தன் கையிலிருக்கும் தாமரை மொட்டால் நிலத்தில் குத்தி, கமல புஷ்கரணி என்னும் தீர்த்தத்தை உண்டாக்கி, அதில் மூழ்கிஎழச் செய்ததும், அவரது பாவங்கள் அனைத்தும் நிவர்த்தியானது. அதன் பின் மகாபலி இக்கோவிலைப் பெரிதாகக் கட்டினார். வாமன அவதாரம் எடுத்து, அத்தகைய மாவலியின் கர்வத்தை அழித்த பெருமான், திருமகளைத் தன் மார்பில் உடையவன் உறைந்திருக்கும் கண்டியூரைப் போற்றச்

சொல்லும் நான்காம் பாடல் :

*செங்கட் கருமுகிலான் சேர்ந்ததிருக் கண்டியூர்*
*எங்கட் கிடமென்பார் இனிப்பிறவி சேரார்காண்*
*மங்கைதிரு மார்புடையான் மாவலியின் வீறழித்தான்*
*இங்குறையும் கண்டியூர் இனி என்றும் போற்றுதுமே.*

5. சிவபெருமான், திருமாலின் தங்கையான பார்வதியைத் திருமணம் செய்து கொண்டு மைத்துனரானதால் சிவனின் பிறவிப் பிணியை அறுப்பதற்காக, திருக்கண்டியூரில் உறைந்த பெருமானை விரும்பிப் பணிந்தால் நம் வினையையும் அறுப்பார் எனக் கூறும் ஐந்தாம் பாடல் :

*நாட்டில் பிறந்தார் நலங்காணும் கருத்தோடு*
*நாட்டமது மூன்றுடைய நாயகன்தன் மைத்துனனார்*
*வாட்டும் பிறவிவலை யறுக்கவந்த (திருக்) கண்டியூர்*
*வீட்டும் நம்வினையை விரும்பிப் பணியுமினே.*

பிரம்மனின் பிடுங்கப்பட்ட ஐந்தாவது தலையின் ஓட்டைக்கையில் ஏந்தி, பிட்சை பெற்று உண்டு வந்த சிவபெருமானுக்குச் சாபவிமோசனம் அளித்தவன், உலகம் போற்றும் திருக்கண்டியூரில் அருள் பாலிக்கின்றான். திருவரங்கம், திருமெய்யம், திருக்கச்சி, திருக்கடல் மல்லை ஆகிய தலங்களிலும் எழுந்தருளியிருக்கும் அப்பிரானை வணங்கி, அவன் திருவடி பற்றி உய்வு பெறுவதை விடுத்து நமக்கு வேறுவழியில்லை எனக் கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*பிண்டியார் மண்டையேந்தி பிறர்மனை திரிதந்துண்ணும்*
*உண்டியான் சாபந்தீர்த்த ஒருவனூர், உலகமேத்தும்*
*கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று*
*மண்டினார்க்கு உய்யல் அல்லால் மற்றையார்க்கு உய்யலாமே*

*(தொடரும்...)*

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

## 28

ஓர் ஊரில் ஒரு பால்காரப் பெண் இருந்தாள்; அந்த ஊரில் இருந்த அந்தணப் பூசாரிக்கு அவள் தினம் பால் விற்பனை செய்து வந்தாள். பால்காரப் பெண்ணின் வீடு ஆற்றின் எதிர்கரையில் இருந்தது. அவள் தினமும் படகின் மூலம்தான் இக்கரைக்கு வந்து பூசாரி வீட்டுக்குப் பால் ஊற்ற வேண்டும். அவள் வருகிற நேரத்திற்கு, பலநாள்களில் படகு சரியாகக் கிடைப்பதில்லை. எனவே ஒவ்வொரு நாளும் அவள் வந்து சேர்வதற்குத் தாமதம் ஆகிவிடும். தினந்தோறும் அவள் இப்படித் தாமதமாக வருவதற்குப் பூசாரி மிகவும் கடிந்து கொண்டார்; அதற்கு அந்தப் பால்காரப் பெண், நான் என்ன செய்வது? எங்கள் வீட்டிலிருந்து நான் மிகவும் சீக்கிரமாகத்தான் புறப்பட்டு விடுகிறேன்; ஆற்றங்கரைக்கு வந்து படகுக்காக ரொம்ப நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது என்றாள்.

அதற்கு அந்தப் பூசாரி, நல்ல பெண்ணம்மா நீ, கடவுளின் பெயரை உச்சரித்து உச்சரித்தே எத்தனையோ பேர்கள், இந்த உலகத்தில் வாழ்க்கை என்னும் கடலையே தாண்டியிருக்கிறார்கள், நீ என்ன என்றால், இந்த ஆற்றுத் தண்ணீரைத் தாண்டிவர முடியவில்லை என்று பேசுகிறாயே! என்றார்.

அந்த ஏழை எளிய பெண்மணி, இதைக் கேட்டதும், மிகவும் மகிழ்ச்சியடைந்தாள்; ஆற்றைக் கடந்து வருவதற்கு இப்படி ஓர் எளிய வழியும் இருக்கிறதே!... கடவுளின் பெயரை உச்சரித்தால் எளிமையாக ஆற்றைக் கடந்து விடலாமே என்று தனக்குள் நினைத்துக் கொண்டாள்.

அடுத்த நாளிலிருந்து அந்தணப் பூசாரியின் வீட்டுக்குக் குறிப்பிட்ட நேரத்தில் விடியற்காலையில் எந்தத் தாமதமும் இல்லாமல் பால்வந்து சேர்ந்தது. ஒருநாள் அந்தப் பூசாரி பால்காரப் பெண்ணிடம் கேட்டார்:

இப்பொழுதெல்லாம் நீ மிகச் சரியான நேரத்தில் பால்கொண்டு வந்து விடுகிறாயே, தாமதமே ஆவதில்லையே எப்படி?

இந்தப் பால்காரப் பெண்மணி சொன்னாள் :

எல்லாம் நீங்கள் சொன்ன வழிதான் கடவுளின் நாமத்தை உச்சரித்துக் கொண்டே ஆற்றைக் கடந்து விடுகிறேன்; படகு வேண்டும், படகோட்டி வேண்டும் என்றெல்லாம் நான் காத்துக் கொண்டிருப்பதில்லை,

பூசாரிக்கு ஒன்றும் புரியவில்லை; நம்பவும் முடியவில்லை; இந்தப் பெண்ணாவது கடவுளின் நாமத்தை உச்சரிப்பதாவது.. ஆற்றைப் படகு இல்லாமல் தினமும் கடந்து வருவதாவது.. என்று ஆச்சரியப்பட்டார். நீ எப்படி ஆற்றைக் கடந்து செல்கிறாய் என்று எனக்குக் காட்ட முடியுமா? என்றும் கேட்டார். அந்தப் பெண்மணி சிறிதும் தயங்கவில்லை வாருங்கள், காட்டுகிறேன் என்று அவரை அழைத்துக் கொண்டு போனாள். இருவரும் ஆற்றங்கரைக்குப் பேனார்கள்.

பால்காரப் பெண்மணி கடவுளின் திருநாமங்களை உச்சரித்துக் கொண்டே ஆற்றில் இறங்கினாள்; அவளால் நீரின் மேலேயே நடக்க முடிந்தது; வெகு சுலபமாக நடந்து கொண்டிருந்தாள்; பின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். பின்னால், கடவுளின் திருநாமங்களை உச்சரித்துக் கொண்டே இறங்கிய பூசாரி, அவள் நடந்ததைப் போல நீரின் மேலே நடக்க முடியவில்லை; நீருக்குள் விழுந்துவிட்டார்; ஆடையெல்லாம் நனைந்து போய்விட்டது; அவரது நிலைமையைப் பார்த்த அந்தப் பெண்மணி சொன்னாள்;

அய்யா, பூசாரியாரே, நீங்கள் கடவுளின் திருநாமங்களை வெறும் உதட்டளவில் தான் உச்சரித்தீர்கள்; கடவுளின் மீது நம்பிக்கை உங்களுக்கு வரவில்லை; அதனால் தான் உள்ளே இறங்கியதும் நனைந்து விடுமே என்று பயந்து வேட்டி முனையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டீர்கள்; கடவுளை நீங்கள் முழுமையாக நம்பினால் இப்படியெல்லாம் செய்யமாட்டீர்கள்; என்னைப் பாருங்கள்,.... நான் கடவுளின் திருநாமங்களை இதயத்தால் சொல்கிறேன்... கடவுளின் மீது முழுநம்பிக்கை வைத்து ஆற்றில் இறங்குகிறேன்,.... ஆடைநனைந்து விடுமே என்கிற கவலையெல்லாம் எனக்குக் கிடையாது.

(29)

வெறும் கண்ணாடியில் எந்த ஒரு உருவமும் பதிவதில்லை; ஆனால் தகுந்த ரசாயனப் பொருளை அந்தக் கண்ணாடியின் மேல் பூசினால்,

பூசிய பிறகு, படங்களை எழுதலாம்; அதுபோல, பக்தியாகிய ரசாயனப் பொருளை இருதயத்தின் மீது தடவிக் கொண்டால், அங்கு இறைவனுடைய உருவத்தைப் பதியச் செய்து விடலாம்.

(30)

குளத்துத் தண்ணீரில் படிந்து கிடக்கும் பாசியைக் கொஞ்சம் ஒதுக்க நினைத்து ஒதுக்கினால் கொஞ்சம் ஒதுங்கி, அது மறுபடியும் பரவித் தண்ணீரை மறைத்துக் கொண்டுதான் நிற்கும். அதே போல மாயை என்பதை ஒதுக்க நினைத்து, ஒதுக்கினால் அது மறுபடியும் வந்து, நம்மைத் துன்புறுத்தவே செய்யும். பக்தியாலும், ஞானத்தாலும் மனத்துக்கு வேலிகட்ட வேண்டும்; பக்தியும் ஞானமும்தான் மாயை மறுபடியும் வராமல் தடுக்கும்.

(31)

பணக்காரன் ஒருவனுடைய வேலைக்காரன், ஒரு சமயம் தன் எஜமானனாகிய அந்தப் பணக்காரனைப் பார்க்கச் சென்றான்; சென்று, வீட்டின் ஒரு மூலைப் பக்கம் ஒதுங்கி நின்றான்; ஒரு சிறிய இலந்தைப் பழத்தைக் கொண்டு வந்து அதையும் தன் ஆடை முனையில் சுற்றி வைத்தபடி நின்று கொண்டிருந்தான். அந்தப் பணக்கார எஜமானன் வேலைக்காரனைப் பார்த்து, என்ன வேலையாக வந்தாய்? கையில் என்னவோ வைத்திருக்கிறாயே? என்று கேட்டான். வேலைக்காரன் மிகவும் பணிவுடன் தான் கொண்டு வந்திருந்த சாதாரணமான அந்த இலந்தைப் பழத்தை வைத்து, தாங்கள் சாப்பிட வேண்டும் எனக்கேட்டுக் கொண்டான். வேலைக்காரனின் பணிவைக்கண்டு மகிழ்ச்சியடைந்த அந்தப் பணக்கார எஜமான், அடடே, அற்புதமான பழமாக இருக்கிறதே என்று மகிழ்ந்து பழத்தை எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டான். எங்கிருந்து இந்தப் பழம் உனக்குக் கிடைத்தது என்றும் கேட்டான். இறைவனும் அப்படித்தான் பக்தி என்னும் வலைக்குள் தான் பிடிபடுவான்.

(32)

இறைவன் உலகம் எங்கும் பல்வேறு ரூபங்களில் வியாபித்துள்ளான். பக்தி என்ற ஓர் எளிய மார்க்கத்தை ஒருவன் பின்பற்றினால் போதும். ஊரெங்கும் உலகமெங்கும் ஏன் சுற்ற வேண்டும்? ஒரு குவளைத் தண்ணீரால், தாகம் தீர்ந்து விடும்போது, குளத்தில், ஏரியில், எவ்வளவு தண்ணீர் இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன?

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### (இராமனின் தம்பிகள்)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

தசரதனை நல்லடக்கம் செய்த பின்னர் வசிஷ்டரும் அமைச்சர் சுமந்திரர் ஆகியவர்களும் பரதனை அழைத்து முடிசூடிக் கொள்ளச் சொல்லி வேண்டினார்கள்.

**மூன்றுல கினுக்கும்ஓர் முதல்வ னாய்முதல்**
**தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்**
**சான்றவர் உரைசெய்அத் தருமம் ஆயதேல்**
**ஈன்றவள் செய்கையில் இழுக்குண் டாகுமோ?**

என் தாயாகிய கைகேயி செய்த பழிக்கு நான் பரிகாரம் தேட வேண்டும். நான் ஒரு கணம்கூட நாடாள ஒப்புக் கொள்ள மாட்டேன். என் அரசுக்கு உரிமை கொண்ட மூத்தவர் என் தமயன் அவரை மீண்டும் அழைத்து வந்து நாடாளச் செய்வேன் என்று வஞ்சினம் உரைத்தான்.

**நன்னெறி என்னினும், நான்இந் நானிலம்**
**மன்உயிர்ப் பொறைசுமந்(து), இருந்து வாழ்கிலேன்**
**அன்னவன் தனைக் கொணர்ந்(து) அலங்கல் மாமுடி**
**தொல்நெறி முறைமையில் சூட்டிக் காண்டிரால்**

அதனைக் கேட்ட வசிஷ்டரும் மற்றைய முனிவர்களும், அமைச்சர்களும், மனமாரப் பரதனுடைய நன்னடத்தையை ஏற்றுப் புகழ்ந்தனர்.

**ஏழினோ(டு) ஏழ்எனும் உலகம் எஞ்சினும்**
**வாழிய நின்புகழ்! என்று வாழ்த்தினார்.**

பரதன் இராமபிரானைத் திரும்ப அழைத்து வரச் செல்வேன் என்று உரைத்துப் புறப்பட்டான். அவனுடன் அமைச்சர்கள், முனிவர்கள், பொதுமக்கள் அனைவரும் பெருந்திரளாகப் புறப்பட்டுச் சென்றார்கள். மக்கள் கூட்டம் திரண்டு வருவதைக் கண்ட குகன் சினம் கொண்டு நாட்டைத் தம்பியருக்கு அளித்து வனம் புகுந்த என் ஈசனே, என்னையும் ஒரு பொருளாக மதித்து என்னை உயிர்த் தோழன் என்று ஏற்றுக் கொண்ட இராமபிரானுக்கு இந்த காடும் கொடுக்கிலராகி எடுக்க

வந்தனர் என்று ஆத்திரப்பட்டுத் தன்னுடைய படையினரைத் திரட்டி எதிர்வரும் படைகள் எல்லாம் எலிகள் என் படை அரவம் என கர்ஜித்துப் புறப்பட்டான்.

**ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர்போவாரோ?**
**வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?**
**தோழமை என்று, அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ?**
**ஏழைமை வேடன் இறந்திலன் என்று எனை ஏசாரோ?**

**ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள**
**வேடு கொடுத்தது, பார் எனும் இப்புகழ் மேவீரோ?**
**நாடு கொடுத்த என் நாயகனுக்கு இவர், நாம்ஆளும்**
**காடு கொடுக்கிலர் ஆகி, எடுத்தது காணீரோ?**

பரதனை நெருங்கி அவனுடைய தவக்கோலத்தைக் கண்டு பரதனுடைய நல்நோக்கத்தை அறிந்து அவன் கையில் இருந்த வில் தானாகக் கீழே விழுந்தது.

**நம்பியும்என் நாயகனை ஒக்கின்றான் அயல்நின்றான்**
**தம்பியையும் ஒக்கின்றான் தவவேடம் தலைநின்றான்**
**துன்பம்ஒரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்**
**எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்(பு)! என்றான்**

அடுத்துக் கோசலையை அறிமுகப்படுத்தினான் பரதன். தயரதசக்கரவர்த்தியின் மூத்த மனைவி, இராமனைப் பெற்ற பெருமாட்டி. உடனே குகன் கோசலையின் மலர்ப் பாதங்களில் விழுந்து வணங்கினான். இவன் இராமனுக்கு இனிய நண்பன் எங்கள் மூவருக்கும் தமையன் இவன்பேர் குகன் என்றான் பரதன். இதன் மூலம் இராமபிரானுடைய விருப்பப்படி குகனை நால்வரும் தன்னுடைய சகோதரராக ஏற்றுக் கொண்டனர். கோசலையும் நீங்கள் ஐவரும் சகோதரராக ஒற்றுமையுடன் வாழ்வீர்களாக என்று வாழ்த்தினார். சுமித்திரையை இராமனை விட்டு என்றுமே பிரியாத இலக்குவனைப் பெற்ற தியாகவதி என்று அறிமுகப்படுத்தினான்.

இலக்குவன் பர்ணசாலையை நெருங்கி வரும் படைகளைக் கண்டு படையெடுத்து வருவதாக இராமனிடம் கூறிக் காலில் வீரகழல்கள் கட்டி போர்க்கோலம் கொண்டு போருக்குத் தயார் ஆனான். கோபப்படாதே, நான் சொல்வதைக் கேள் என்பால் உள்ள அன்பின் மிகுதியால் பரதனுடைய இயல்பை அறியாமல் கோபப்படுகிறாய், பரதன் வேதநெறி தவறாத ஒழுக்க சீலன், அறம் தவறாதவன் அரசை என்னிடம் மீண்டும் தரவே இங்கு வருகிறான். வேறு விதமாகக் கருதுவது நன்றல்ல என்று கூறிச் சமாதானப்படுத்தினார்.

பின்னர் குகன் எதிர்கொண்டு அழைத்து வந்தான். பரதனும் இராமபிரான் முன்னே வந்து தொழுது நின்றான். இராமபிரான் திருவடி விழுந்து வணங்கினான். இராமரும் உடனே பரதன் என் தாய் கேட்டு, தந்தை எனக்கு அளித்த அயோத்தி நாட்டை நீ திரும்ப ஏற்று அயோத்தி வந்து அரசாட்சி செய்ய வேண்டும். எனக் கூறித்
தந்தையினும் களிகூரத்
தழுவினான், தகவுடையோர்

இராமபிரான் தந்தைக்கு நான் செய்து கொடுத்த உறுதியின் வண்ணம் 14 ஆண்டுகள் காட்டில் தவம் செய்வது தான் கடமை, அதை மீறுவது நன்றல்ல என்று பரதனைச் சமாதானப்படுத்தி அமைதி அடையச் செய்தார்.

இந்த நிகழ்ச்சிகளைப் பார்த்த குகன்

***தாய்உரை கொண்டு, தாதை உதவிய தரணி தன்னைத்***
***தீவினை என்ன நீத்துச், சிந்தனை முகத்தில் தேக்கிப்***
***போயினை என்ற போழ்து, புகழினோய் தன்மை கண்டால்,***
***ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா!***

என்றான். பின்னர் பர்ணக சாலையிலேயே அனைவரும் தங்கினர். மறுநாள் காலையில் தன்னையும் மற்றையோரையும் படகில் ஏற்றிக் கரைசேர்க்க வேண்டினான்.

உங்கள் எல்லோருக்கும் நாட்டிற்கும் பெரும் துன்பத்தை விளைவித்த பாவியின் மகனாகிய நான் அரசாட்சி செய்வது நெறியன்று. நீங்கள் அரசைத் துறப்பதும் நான் ஏற்பதும் முறையன்று.

தாங்கள் அயோத்தி வந்து முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்றான். உடனே இராமர் தான் தசரதருக்கு அளித்த வாக்கினை மீண்டும் கூறி இந்த அரசையான்தர நீ முடிசூட்டிக் கொள், நான் காட்டில் தவம் ஏற்கும்பொழுது நாட்டை என் ஆணையில் ஆள்வாயாக. இடையில் வசிஷ்டரும் இராமனை அரசை ஏற்க வேண்டினார்; இராமர் மறுத்தார். அங்கு இருந்த பரத்வாஜர் முதலிய முனிவர்களும் இராமர் 14 ஆண்டுகள் தவம் செய்து இங்குள்ள அரக்கர்களை அழித்து எங்கள் தவத்திற்கு உதவுவார் என்று கூறிப் பரதனை அரசாட்சி ஏற்க வற்புறுத்தினார்கள்.

அப்படியானால் நான் சிம்மாசனத்தில் அமரமாட்டேன். உன்னுடைய திருவடிகளைச் சிம்மாசனத்தில் அமர்த்தி உன் ஆணையால், உன்னுடைய பாதுகையின் ஆணையால் நான் அயோத்திக்கு வெளியே தவச்சாலையில் இருந்து அரசாள்வேன் என்று வேண்டி

***செம்மையின் திருவடித் தலம் தந்தீக என***
***எம்மையும் தருவன இரண்டும் நல்கினான்.***
***அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்,***
***முடித்தலம் இவை என, முறையின் சூடினான்.***

இராமனிடம் விடை பெற்று இராமனுடைய பாதுகையுடன் அனைவரும் திரும்பிச் சென்றனர். பரதன் இராமபிரானுடைய பாதங்களைச் சிம்மாசனத்தின் மேல் வைத்துச் செங்கோல் செலுத்தி வந்தான். நந்திக் கிராமத்தில் தவச்சாலை அமைத்துத் தவவாழ்க்கை வாழ்ந்து வந்தார்.

*(தொடரும்...)*



## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 7

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

காப்பியக் கவிஞர் மீனவரின் ஓராண்டு நினைவஞ்சலி நடந்த தொடர்பில் (23.01.2021) தெய்வத்திருவாக அவர் நம்மை மானசீகமாக வழிநடத்தும் சூழலில் பரந்தாமன் பாமாலையின் 31ஆம் திவ்ய தேசமாம் திருச்செம் பொன்செய் கோவில் அல்லிமாமலர் நாச்சியார் உடனாய செம்பொன் அரங்கரைச் சேவிக்க வந்துள்ளோம்.

திருநாங்கூரைச் சுற்றிய விண்ணகரத் திவ்ய தேசங்களுள் இதுவும் ஒன்று. கிழக்கு நோக்கிய மூலவர் பேரருளாளன் என்னும் திருநாமத்துடனும் உற்சவர் செம்பொன்னரங்கர் என்ற ஹேமரங்கர் என்னும் திருநாமத்துடனும் சேவை சாதிக்கின்றனர்.

திருமங்கை மன்னன் மங்களாசாசனத்தில் தேனமர் சோலை நாங்கை நன்நடுவுள் செம்பொன்செய் கோயில் எனப்பாடப்பட்டுள்ளது. இதனை மீனவரும் வழிமொழிவார் போல மாமறையோர் வாழ் நாங்கூர் மாநகரப் பதி – என்றார்.

இங்கே காசியபன் என்னும் முனிவருக்குப் பரந்தாமன் அருள் பாலித்ததாகவும் மீனவர், இங்கே காசியபன் தொழச் செல்வம் தந்தானை வணங்குமின் எனக் கூறி நம்மை ஆற்றுப்படுத்துகிறார்.

இந்தக் காசியப முனிவர் நாணற்பூப் போல் மேனிவெளுத்திருந்த குறையால் அக்குறைபோகத் தவம் செய்து பலன் பெற்றாராம். அதனால் இடரகலும் மிடியகலும் (வறுமை) வந்து தொழுமின் என்கிறார் மீனவர். மேலும் ஒரு நான்மறையாளனுக்குப் பொற்பசு ஒன்றை நல்கியதாகவும் கூறுவதால் அப்பொற் கோயில் வணங்கியவாறு திருநாங்கூர்ச் சூழலில் உள்ள திருமணிமாடக் கோயில் தரிசிக்கச் செல்கின்றோம்.

இங்கே நந்தா விளக்கனைய நாராயணன் புண்டரீகவல்லித் தாயாருடன் கிழக்கு நோக்கிய மூலவராய்ச் சேவை சாதிக்கின்றார், திருமங்கை ஆழ்வாரின் மங்களா சாசனத்தில் திருநாங்கூர் மணிமாடக் கோயில் என்றும் பெரிய திருமடலில் நாங்கூரில் மன்னும்

மணிமாடக் கோயில் மணாளனை என்றும் சிலாகித்துக் கூறப்பட்டுள்ளதால் இப்பரந்தாமன் அளத்தற்கரிய பேரருளாளனாய் உள்ளான் எனத் தெரிகிறது.

அதாவது நந்தா விளக்கென்பது எப்போதும் சீரான ஒளி தந்த வண்ணம் அணையாமல் இருப்பது என்பது கருத்து, இவ்விளக்கை ஏற்றியவர் இல்லை என்பதால் தானாகச் சுடர்விட்டொளிர்வதான விளக்கு எனப் பொருத்தமான பெயர்பெற்றது. சூரிய ஒளியைப் போலப் பிரகாசித்துக் கொண்டே இருப்பதான கருத்தால்யார் எந்த நேரத்தில் வந்து வணங்கினாலும் அருள் வழங்கும் ஆதிமூலமாக உள்ளான் நாராயணன் என்பது கருத்து.

அழகிய மாளிகையே மணிமாடம். இம்மணி நவரத்தினங்களுள் ஒன்று; பளிங்கு போல் ஒளிவு மறைவு இன்றி உருவத்தைக் காட்டும் மணிபோல இம்மாடக் கோயிலில் வீற்றிருக்கும் நாராயணனும் உள்ளும் புறமும் ஒரே தன்மையாய் வழிகாட்டி நடத்திச் செல்வான் என்ற கருத்தால் உள்நிறைந்த பேரன்பில் உளமுருகும் அடியாரை நண்ணி வினைபோக்கும் நாராயணன் என்றார் மீனவர்.

மேலும் திருநாங்கூரில் கருடசேவை கண்கொள்ளாக் காட்சி தருவதாகும். 12 திவ்ய தேசப்பரந்தாமரும் பல்லக்கில் எழுந்தருளிப் பின்னர் இரவில் 12 கருடசேவையில் காட்சி தருவர். இவ்வைபவம் தை அமாவாசையில் நடைபெறும், இந்த உற்சவப் பதிவை மீனவனார் கருடனார் திருச் சேவை காண்கின்ற பதி இதனைத் தினம் பணிமின் என்கிறார்.

இப்படிக் கருட சேவை காட்டித்தனிப் பேறடையச் செய்த மீனவர் அடுத்ததான திருவைகுந்த விண்ணகரம் என்னும் திருநாங்கூர்ப் பகுதியில் உள்ள திவ்ய தேசத்திற்கு நம்மை உடன் அழைத்துச் செல்ல அங்கு வைகுந்த வல்லியுடனாய வைகுந்த நாதனைத் தரிசிக்கின்றோம்.

இங்குள்ள மூலவரும் உற்சவரும் வீற்றிருந்த (அமர்ந்த) திருக் கோலமுடன் காட்சி நல்குகின்றனர். இத்தலத்தில் தாமரைக் கண்ணனான வைகுந்தன் - ஞானிகளுக்கும் ஆன்மாக்களுக்கும் இந்த உலகமே தனது இருப்பிடமாதலால் இதனைத் தரிசிப்பதன் வழி

மறுமையில் பரமபதம் கிட்டும் என்ற தத்துவ அதிர்வுடைய தலமாக உள்ளதாய்ச் சேவை சாதிக்கின்றான்.

திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். உதங்க மகரிஷிக்கு இவ்வைகுந்த விண்ணகரத்தான் அருள்பாலித்துள்ளான் என்பது இத்தலப் பெருமையாகக் கூறப்படுகிறது. எங்கள் தனி நாயகனே எமக்கருள் என ஈசனவன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் எனத் திருமங்கையார் சைவ வைணவ ஒற்றுமையை உணர்த்துகிறார். இதனால் பிற மதத்தவரையும் மதித்ததால் திருமங்கை மன்னர்க்குப் பரகாலன் என்ற சிறப்புப் பெயருண்டு, அதனை மீனவனார் நினைப்பிக்கும் வண்ணமாகவே வைகுந்த விண்ணகரம் மேவிப் பரகாலன் போற்றி செய்தவன் பாதங்களைப் போற்றுமின் (1) என்றார்.

இப்படியாக மண்ணுலகிலேயே வைகுந்த தரிசனத்தைக் காட்டிய மீனவருடன் திருவாலி - திரு நகரி என்ற சீர்காழி சார்ந்த திவ்ய தேசத்திற்குச் செல்லும் நாம் இருவேறான நிலையில் ஒருவன் என்னும் ஒருவனையே தரிசிக்கின்றோம், பரிபாடல்-திருமாலை ஒருகுழை ஒருவன் என்கிறது.

ஒருவன் என்பது பிறரை ஒருவி (நீக்கி) விட்டுத் தனித்தவனாகப் பார்க்கும் நிலையாகும். அந்த வகையில் திருவாலியும் திருநகரியும் தனித்தனி விண்ணகரங்களாயினும் அமிர்தகடவல்லி உடனாய லெட்சுமி நரசிம்ம தேவராசனாய்ப் பரந்தாமன் காட்சி தருகிறான்.

திருவாலி – திருநாங்கூரிலிருந்து 6கல் தொலைவிலும் திருநகரி – திருவாலியிலிருந்து 3 கல் தொலைவிலுமாக உள்ளன. திவ்ய தேசக் கணக்கில் திருஆலி திருநகரி என்பர். திருமகள் எம்பெருமானை ஆலிங்கனம் செய்தமையால் ஆலி ஆயிற்று.

மேலும் தனக்கும் தன்னுடைய பக்தனுக்கும் இடையில் எந்தத் தடையும் இல்லை என்பதால் பக்தனாகிய ஆன்மா தன்னைத் தழுவி ஆலிங்கனம் செய்து வழிபடக் கூடிய அற்புதமான அருள் வடிவம் கொண்ட தத்துவத்தால் திரு ஆலி நகராளன் எனப்பரந்தாமன் சேவை சாதிக்கின்றான்.

குலசேகர ஆழ்வார் பாடிய தாலாட்டில் ஆலி நகர்க் கதிபதியே! அயோத்திமனே! தாலேலோ! எனத் தாலாட்டுகின்றார். திருமங்கை மன்னன் திருநீர் மலைப்பதிகப் பனுவலில் திருவாலி வீற்றிருந்தான் எனப்பாடுகின்றார். வீற்றிருத்தலான குறிப்பு – மேற்குத் திசை நோக்கி வீற்றிருத்தலைக் குறிப்பதாகும். திருவாலியைச் சிறப்பித்தே தனிப் பதிகமும் பாடியுள்ளார்.

திருவாலி என்பதை வயலாலி என்றும் கூறுவர். சுற்றிலும் வயல் சூழ்ந்து ஆலிங்கனம் போல் அணைந்து கிடக்கும் வேளாண் விளைச்சலான ஊர் என்பதால் வயலாலி என்பதன் மருவுச் சொல்லாய் திருவாலி என்று கூறினாராம் என்க!

திருநகரி மணவாளன் திருவாலி நாடனுக்குப்
பொருவரிய நங்கை எழில் பூரண வல்லியாள்
கரம் பற்றி மணக்கோலம் காட்டிய நற்கோபாலன்

என்பது மீனவரின் திருவாக்கு. இதில் திருநகரியும் திருவாலியும் ஒருசேரக் கூறப்பட்டாலும் வெவ்வேறான பரந்தாமன் சந்நிதிகளுக்கு அமிர்தவல்லியான ஒருத்தியே மணவாட்டியாக அமைந்துள்ளாள் என்ற குறிப்பு சிறப்புக்குரியதாகும். இதுபோல் சைவத்தில் காஞ்சிபுரத்தின் சிவாலயங்களில் காமாட்சி ஒருத்தியே சக்தியாக எல்லாச் சிவனாரோடும் வீற்றிருப்பதான சிறப்புப் போன்றது என நினைப்பிக்குமாறு மீனவர் பாடியுள்ளார் எனலாம்.

இங்ஙனம் ஒருகல்லில் இருமாங்காய் போலத் திருவாலி திருநகரிகளைத் தரிசனம் காட்டிய மீனவர் திருத் தேவனார்த் தொகை என்ற திவ்ய தேசத்தின் தெய்வநாயகர் சந்நிதியை வணங்கச் செய்கிறார். இத்தலம் சீர்காழிக்கு அருகே உள்ளது.

மூலவர் கடல் மாமகள் நாச்சியார் உடனாய தெய்வமானாலும் உற்சவர் மாதவநாயகி உடனாய மாதவப் பெருமாளாக உள்ளார். கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் சேவை சாதிக்கும் பரந்தாமனைத் திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

இத்தலம் – திருவெண்காட்டிற்குப் பக்கமாக உள்ள கீழச்சாலை எனப்படும் பகுதியாகும். தேவர்கள் கூட்டமாகக் கூடியதால் தேவனார்

தொகை எனப்பட்டது. வசிஷ்டமாமுனிவருக்குப் பிரத்திட்சையாகக் காட்சிநல்கிய பரந்தாமன் என இத்தேவனார் தொகை மகாத்மியம் கூறும்.

இவ்வுண்மைக் கேற்ப மீனவனார் தேவர் புகழ் சீருடைய திருத்தேவனார் தொகைவாழ் பரம்பொருள் எனப் போற்றுகிறார். கலியன் எனப்படும் திருமங்கை ஆழ்வார் இயற்கை வளமான இத்திருத் தேவனார் தொகையூரை ஒரு பதிகத்தால் பாடிப்பரவினார். அங்ஙனமே மீனவரும் இயற்கையைச் சுட்டிப் பாடியவாறு திருநாங்கூரிலேயே உள்ள திருத்தெற்றியம்பலம் எனும் திவ்ய தேசத்திற்கு நம்மைக் கூட்டிச் செல்கிறார்.

அங்கே உலகங்களை இயக்கும் நடனத்தை ஆடிக்கொண்டிருக்கும் அம்பலத்தைப் பார்த்த வண்ணம் தாமும் தெய்வக் கூத்து உகப்பனாகத்தத்துவம் காட்டுகிறான் பரந்தாமன். அவன்தான் சிதம்பரத்தே உள்ள சித்ர கூடத்தான் போலப் புயங்கசயனத்துடன் சேவை சாதிக்கின்றான் எனக்காட்டுகிறார் மீனவர். இதைத்தான் அவர் தம் பாடலில், திருத்தெற்றி அம்பலத்தே காரணிந்த மேனியனாய்க் காண்கிறான் எனப் பாடியுள்ளார்.

திருமங்கை மன்னன் மங்களாசாசனம் கொண்டதில் நாங்கூர்த் திருத்தெற்றியம் பலம் என்றே ஒவ்வொரு பாடலிலும் சிறப்பிக்கப்படுகிறது. இங்ஙனம் செங்கமல வல்லியுடனாய செங்கண்மால் தெற்றியம்பலம் பரந்தாமன் அருள் பெற்றதும் திருநாங்கூர் ஒட்டியதிரு மணிக்கூடம் என்ற திவ்ய தேசத்திற்கு மீனவருடன் செல்லும் நாம் திருமணிக் கூடவரதராசனைச் சேவிக்கின்றோம்.

வீட்டின் மாடத்தில் ஏற்றிவைக்கப்படும் விளக்கு வீடு முழுவதும் ஒளிகாட்டி விளக்குவது போல மனிதர்களின் காவல் தெய்வ விளக்காக விளங்குவதால் திருமணிக்கூடம் என இத்தலம் தத்துவார்த்தமாகப் பெயர் பெற்றது.

கிருத்துவரின் வேதபுத்தகமான பைபிள் நூலில் உன் வார்த்தையான அருள்தீபம் என் வாழ்க்கைப் பாதைக்கு வெளிச்சம் எனக் கூறுவதைப் போல வைணவம் பரந்தாமனைச் சிறுமணி

மாடத்தின் விளக்காகப் போற்றுகிறது. இதைத்தான் மீனவர் அண்டம் அனந்த சுடர் அரியவனை இப்பதியில் கண்டு தொழ வம்மின்காள் கதிபெறுதல் நிச்சயம் (2) என்கிறார். திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம் பெற்றதோர் நல்லக விளக்காக ஒளிகாட்டிய உத்தமனாம் மணிக்கூட நாயகனை வழிபட்டதும் சீர்காழியைச் சார்ந்த திருவெள்ளக்குளம் என்ற விண்ணகரைச் சேவிக்க நம்மை அழைக்கும் மீனவர், அங்குள்ள மனிதகுல உறவில் வழிகாட்டியான சகோதரத் துவத்தை நினைப்பிக்கும் விதமாக வீற்றிருக்கும் அண்ணன் பெருமாள் மூலவரின் சிறப்பை விளக்குகிறார்.

இறைவன் உடன் தோன்றியவனாய் உள்ளான் என அப்பரடிகள் கூறுவது போல அண்ணன் கோவில் என்றே இத்திரு வெள்ளக் குளத்திற்கு ஒரு பெயரும் உள்ளது. அண்ணல் அண்ணா என்ற சொற்கள் இறைத்தலைமைக் குரியன. அந்த வகையில் மனிதகுல சகோதரத்துவத்தின் மனிதநேயப் பண்பை இத்திருத்தலம் பெயராகப் பெற்றுள்ளது. இப்பெயர்களை மீனவர் - திருவெள்ளக் குளத்தமர்ந்தான் என்றும் வண்டு திகழ்சோலை அண்ணன் பெருமாளை என்றும் கூறி நம்மை வணங்கச் செய்கின்றார். மங்களாசாசனம் பாடிய திருமங்கை மன்னர் அன்புடை வேதியர் பன்னிய நாங்கூர்ச் செல்வன் திருவெள்ளக்குளம் என்கிறார். ஆனால் அண்ணன் கோயில் என்ற வழக்கு மூலவரின் அண்ணன் பெருமாள் என்றதால் அமைந்ததாகும். இப்பெயரைத் திருமங்கையார் குறிக்கவில்லை.

சகோதர வாஞ்சையுடன் திருவெள்ளக்குளம் வணங்கி விடைபெறும் நாம் திருப்பார்த்தன் பள்ளி எனும் திவ்ய தேசத்திற்கு மீனவருடன் செல்கின்றோம்.

தாமரைநாயகி உடனாய பார்த்தசாரதியின் மேற்கு நோக்கிய சந்நிதியைத் தரிசிக்கின்றோம். இப்பார்த்தசாரதி என்ற பெயர் - இயல்பாகவே பாரதக் கதைப்படிப் பார்த்தனாம் அருச்சுனனுக்குத் தேரோட்டியதால் பார்த்தசாரதி எனப்பட்டாலும் மீனவர் ஒருபுது விளக்கம் தருபவராய், (பாடல் ஒன்றில்) பவளவாய்ச் சீதையினைப் பார்த்தன்பு கொண்டானை எனப் பார்த்ததால் பார்த்தசாரதி என்றது புதுமையாக உள்ளது.

உலகம் என்ற தேரை இயக்கி இயங்க வைக்கும் தத்துவத்தை நினைப்பிப்பதன் வகையில் பாரைப் பரிபாலனம் செய்யும் பொருளில் பார்+அத்தன்+பள்ளி என்ற சொற்களின் கூட்டமே பார்த்தன் பள்ளி என ஊர்ப் பெயரானது.

தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்கியவன் இப்பார்த்தன் என்பதால் கையிருந்த கத்தியினால் நிலம் கீண்டு தண்ணீரை உண்டாக்கித் தந்திட்ட மண்ணுண்டான் இருக்கின்ற இத்தலம் வணங்குமின் என மீனவர் நம்மைச் சேவிக்கச் செய்கிறார்.

திருமங்கை மன்னன் மங்களாசாசனத்தில் திருநாங்கைப் பார்த்தன் பள்ளி என்றே கூறப்பட்டநிலையில் அகப்பொருள் சுவைபடவும் பாடல்கள் உள்ளன.

மாமதியை நெருக்குமாட நீடு நாங்கை
நின்மலன் தானென்றென்றோதி
என்மடந்தை பாடுவாளே

என நற்றாய் இரங்கிக் கூறுவதாகத் திருமங்கை மன்னர் பாடுகிறார்.

நாமும் அப்பரந்தாமனை மீனவருடன் சேவித்தவாறே திருச்சித்ர கூடமெனும் சிதம்பரம் கோவிந்த ராசரைக் காணச் சென்று பெருமானின் போகசயனத்தைத் தரிசிக்கின்றோம்.

ஈண்டு உபய நாச்சியாருடன் சேவை சாதிக்கும் உற்சவர்- தேவாதி தேவனாக வீற்றிருந்த திருக்கோலமாய்ப் பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றார். புண்டரீக வல்லி எனும் தாமரை நாயகியின் சந்நிதி தனிச் சிறப்புடையதாகும்.

தில்லைக் கூத்தனின் ஆட்டத்தைக் காணும் விதமாய் நடராசர் சந்நிதிக்கு அருகிலேயே பரந்தாமன் தானே சித்திரமாகப் பள்ளி கொண்டுள்ளான்.

சமய வரலாற்றின்படி நடந்த சில நெருடலால் பரந்தாமன் கடலிலிருந்து கொண்டு வந்து பிரதிட்டை செய்யப்பட்டதாகக் கூறுவர். இதனைக் குறிப்பாகவே மீனவர் கடலாழி நஞ்சுண்டு கையாழி கொண்டருளி அடலாழி என விளங்கும் அல்லி மலர் விழியானை என்றார். ஆழி என்ற சொல் கடலைக் குறிப்பதோடு கையில் ஏந்திய சக்கரத்தையும் குறிக்கும். மேலும் வடமுகா அக்கினியையும் குறிக்கும்.

கடலாழி நஞ்சுண்டு என்றதால் கடலாகிய ஆழியில் கிடத்தப்பட்ட நச்சான சிறு செயலிலிருந்து மீண்டதைக் குறிக்கும். கையாழி – கையில் ஏந்தும் சக்ராயுதத்தைக் குறிக்கும். அடலாழி என்றது வடவைத்தீ எனப்படும் நெருப்பாய் எதிரிகளை அழிக்கும் செயலைக் குறிப்பது.

குலசேகர ஆழ்வாரும் திருமங்கை மன்னரும் மங்களா சாசனம் செய்துள்ளார்கள்.

*வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி*
*விண்முழுது முயக்கொண்ட வீரன் ராமன் தன்னைத்*
*தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்*
*என்று கொலோ கண்குளிரக் காணும் நாளே!*

என ஏங்குகிறார் குலசேகர ஆழ்வார்.

புகழோங்கு தில்லைத் திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே! எனப்பக்தர்களைத் திருமங்கை மன்னர் ஆற்றுப் படுத்துகிறார்.

இப்படியாகச் சோழ நாட்டுத்திருப்பதிகள் நாற்பதிலும் நம்மை அழைத்துச் சென்று அந்தந்த திவ்யங்களை எடுத்துரைத்துப் பரந்தாமர்களைச் சேவிக்கச் செய்த காப்பியக் கவிஞர் மீனவர் அடுத்த நடுநாட்டுத்திருப் பதிகளைத் தரிசிக்க நம்மைத் திருத்தலப் பயணமாகக் கூட்டிச் செல்வதை இனிக்காண் போமாக!

*(தொடரும்...)*

## அருளாளர் வள்ளலார் வாழ்க்கை

(வரலாற்றுக் குறிப்புடன் அருட்பெருஞ்சோதி அகவலில்)

புலவர் மாமணி, ஆறு.மெ.மெய்யாண்டவர்

**25. ஔவியம் ஆதியோர் ஆறும் தவிர்த்த பேர்**
**26. அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ்சோதி** எனும் வரிகள் முடிய அறிந்தோம்.

14. தனி வெளி – சிவவெளி – அருள் வெளி – என மூன்று பகுதிகளாக 27, 28 ஆம் வரிகளைப் பகுத்துரைக்கின்றார் வள்ளலார்.

நம் தமிழ் எழுத்துகளில் “அ” முதல் “ஔ” முடிய உள்ள பன்னிரண்டு எழுத்துகளும் கடந்து 13ஆம் எழுத்தாக ஃ – எனும் ஆய்த எழுத்து

அமைகிறது. இதை இலக்கண நூலார் தனிநிலை, முப்பாற்புள்ளி, ஆய்தம் எனக் குறிப்படுகின்றனர். இதை வள்ளலார் 27 ஆம் வரியிலும் 28ஆம் வரியிலும்

**27. திருநிலைத் தனிவெளி சிவவெளி எனும் ஓர்**
**28. அருள்வெளிப்பதி வளர் அருட்பெருஞ் சோதி**

என்கிறார்.

அதாவது உயிரையும் உடலையும் விடுத்து இரண்டையும் இயக்கும் மையப்புள்ளியாகப் புருவமையத்தில் (சுழுமுனை நாட்டம்) நிலை பெறுகிறது. மூன்று சுழிகளாகத் தனித்து நிற்பதோடு மூன்றும் இணையும் முப்பாற்புள்ளியாக முப்பாற்புள்ளி நிலை பெறுகிறது. இது தனித்துவம் பெறும் தெய்வத் திருவாகப் பொலிவு பெறுகிறது.

"நாசி நுனி வட்டம் நடுவே திருநடனம் புரியும் வாசிதனை நிறுத்தி" என்கிறார் ஒரு சித்தர். அவர் லெப்பை சுவாமிகள் எனப்படுவார். அவர் எழுதிய நூல் பரசிவமாலை. மூக்கின் நுனியில் காற்றை நிறுத்தித் தவம் புரிவதால் இதைத் தெய்வத் தன்மை பொருந்திய தனி நிலைத்திரு எனச் சொற்களை மாற்றிப் பொருள் காண வேண்டும். இதனால் பெறும் "உயிரனுபவம் முற்றிடில் அதனிடத்தே ஓங்கு அருள் அனுபவம் உறும்" என்பது வள்ளலார் வாய்மொழி. உடலும் உயிரும் இணைந்து உயிர்மெய் இணைந்த மனிதன் உணர்வு பெறுகிறான். இதையே உயிரனுபவம் முற்றினால் ஓங்கி வளர்ந்த இறைவனின் அருள்பெறும் அனுபவத்தைப் பெறலாம் என்கிறோம். இப்பன்னிரண்டு நிலைகளைப் பின் வருமாறு உரையாசிரியர்கள் விளக்குவர்.

1) பூத நிலை (கண்ணால் காணும் பருஉடல்) ; 2) கரண நிலை (உடல் செயல்படும் நிலை) ; 3) பிரகிருதி நிலை (அறிவு செயல்படும் நிலை) ; 4) மோகினி நிலை (காம மயக்க நிலை); 5) அசுத்த மாயா நிலை (பொய்த் தோற்றம் அது தூய்மையற்ற பொய்த் தோற்றம் எனப் பொருள்படும்) ; 6) அசுத்த மகா மாயா நிலை (அதாவது மிகுந்த தூய்மையற்ற ஒரு சக்தி ; 7) சுத்த மாயா நிலை (தூய்மையடைந்த மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட சக்தி ) ;8) சுத்த மகா மாயா நிலை (தூய்மை நிறைந்த பேரியக்கமாய் ஆட்டிப் படைக்கும் அழியாத பெரும் சக்தி ; இதுவே சக்தி

வடிவம்; இச்சக்தியிலிருந்து தோன்றுவது இப்பூவுலகமும் உயிர்களும் ஆகும். இதையே மாயா சக்தி என்கின்றோம். 9) சர்வ மகா மாயா நிலை (இவ்வுலகம் முழுதும் மாயையாகிய ஆற்றலுக்குச் சக்திக்குக் கட்டுப்பட்டது) இந்த மாயையே பராசக்தி. மாயாதேவி எனப்படுகிறாள். இச்சக்தி பரம்பொருளாகிய சிவத்தோடு கலந்து உலகை இயக்க நிலைக்குக் கொண்டு வருகிறாள். இதையே பேரறிவு + பேராற்றல். இவ்விரண்டும் இணைந்து இவ்வுலகைத் தூயதாக்கிக் காக்கிறது. உயிர் உடல் இரண்டும் இணைந்த மனித ஆன்மா குண்டலினி ஆற்றலை மேலெழுப்பி மனத்தை ஒருமைப் படுத்துகிறது. இக்குண்டலினி ஆற்றல் மலக்குடலுக்கு (குதம்) மேலே இடுப்புக்கும் கீழே உள்ளது. இதுவே உயிர் ஆதாரநிலை.

இந்த உயிர் ஆதாரநிலை முதுகுத்தண்டின் வழியாக மேலே தலைக்கு வந்து பின் புருவ மையத்தில் நிலை பெறுகிறது. ஒரு முக நினைவில் (தியானம்) அங்கு சூடேறுகிறது. அதை நெற்றிக் கண் என்கிறோம். வலப்புறம் (வலக்கண்) சூரிய ஒளி இடப்புறம் (இடக்கண்) சந்திர ஒளி இரண்டுக்கும் நடுவே நெருப்புக்கண் (அக்கினி) இந்நிலையே முக்கண்கள் ஆகும். இம்முக்கண்களை உடையவன் முக்கண் முதல்வன்; இவனே பரமசிவன். இவனே பிரணவ வடிவினன். இது 11-ஆம் நிலையாகிய பிரணவ நிலை. இதைக் கச்சியப்பர் கந்தபுராணத்தில் இரு பாடல்கள் மூலம் விளக்குவார்.

அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்பிழம்பது ஓர்மேனியாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்து ஆங்கு உதித்தனன் உலகம் உய்ய
இங்கே பிரம்மமாய் சோதிப்பிழம்பது ஓர்மேனி

என்பது இறைவன் பேரொளி வடிவாய்த் தோன்றினான். இதையே வள்ளலார் அருட்பெருஞ்சோதி என்கிறார். நம்முடைய ஓம் நமச்சிவாய எனும் மந்திரமே "சரவண பவ" என்ற ஆறெழுத்து மந்திரமாயின. எனவே நமது மறுவடிவமே ஆறுமுகப் பெருமான் என்கிறார். அவன்வேறு நாம் வேறு என்று சொல்ல முடியாது; நம்மைப் போலவே எல்லாப் பொருள்களிலும் பிரிவில்லாமல் சேர்ந்திருக்கிறான் என்கிறார்

சிவபெருமான். அப்பாடல் வரிகள் இவை

நன்முகம் இருமூன்று உண்டால் நமக்கவைதாமே கந்தன்
தன்முகம் ஆகிஉற்ற தாரகப் பிரமம் ஆகி
முன்மொழிகின்ற நம்தம் மூவிரண்டு எழுத்தும் ஒன்றாய்
உன்மகன் நாமத்து ஓராறு எழுத்தென உதித்ததன்றே

(உன்மகன் - பார்வதி மகன் நாமத்து - சரவணபவ எனும் ஆறெழுத்து மந்திரவடிவினன் முருகன் என்பதாகும்) தாரகம் + பிரமம் - ஓம் எனும் பிரணவ மந்திரம். இதுவே பிரணவ நிலை. 12) பரிக்கிரக நிலை - இப்பரம் பொருளை உணர்ந்து முமுப்பக்குவம் அற்ற மனித ஆன்மா என்பதாம். சான்று அருணகிரிநாதப் பெருமான். பட்டினத்தடிகள் இன்னும் அப்பர், சுந்தரர், ஞான சம்பந்தர், மணிவாகசப் பெருமான் போன்ற சமயகுரவர் நால்வரும் பரிபக்குவ நிலை பெற்றவர்கள் தாமே. வள்ளலாரும் அத்தகு தூய நிலை பெற்ற பெருந்தகையாளரே ஆவார். எனவே இப்பன்னிரு நிலைக்கப்பால் முதிர்கனியாய் அனுபவம் பெற்ற அருள் நிலையே திருநிலைத் தனிவெளியாம் சிவவெளியாகும். புருவமைய தவம் நிறைந்து அமைதியுற்று உச்சந்தலையில் பெறும் தவநிலை அனுபவமே துரியநிலை. அதற்குமேலே வருவது நம்தலையின் நடுவே உண்டாகும். சிற்றம் பலமே துரியாதீதம். துரியம் + அதீதம் - விழிப்பு நிலை தாண்டிய மேல் நிலை.

இதையே வள்ளலார் "வானத்தின் மீது மயிலாடக் கண்டேன் மயில் குயில் ஆச்சுதடி" என்கிறார். மயில் - உருவம் நட்டமாடும் நடராசப் பெருமானை உணர்த்துவது. குயில் - ஒலிக்கும் ஆற்றல் உடையது. அதுவே பிரணவ மந்திரம் ஆகிய ஓம் எனும் குடிலை மந்திர ஒலியாகும். இதை "அ, ருட், பெ, ருஞ், சோ, தி, த, னிப், பெ, ருங்,க, ரு, ணை" எனப் பதின் மூன்று நேரசைகளாய் அமைத்து, பதின் மூன்றாம் நிலையாகிய திருத்தனி வெளியே சிவவெளி என்கிறார் வள்ளற் பெருமான். இந்த அருட்பெரு நிலையே அருட்பெருஞ் சோதியாகும். எனவே, நாம் நமது உண்மை நிலையாகிய திருவளர் தனிநிலை உணர்ந்து அருள்வெளியாம் சிவவெளியில் கலப்போம். மீண்டும் தொடர்வோம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### ஒற்றாடல்

(ஒற்றர்களை ஆளுதல்)

**1. ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.**

ஒற்றும் – ஒற்றர்களையும்; உரைசான்ற நூலும் – அவரை அறிந்து செயல்பட உதவும் அறநூல்களையும்; இவை இரண்டும் – இவை இரண்டையும்; மன்னவன் கண் தெற்றென்க – மன்னவன் தன் கண்களாகக் கொண்டு தெளிதல் வேண்டும்.

மன்னவன் ஒற்றர்களையும் அற நூல்களையும் தனது இரண்டு கண்களாகத் தெளிதல் வேண்டும்.

**2. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்அறிதல் வேந்தன் தொழில்.**

எல்லார்க்கும் – எல்லோரிடத்திலும்; எல்லாம் நிகழ்பவை – நிகழும் செயல்கள் அனைத்தையும்; எஞ்ஞான்றும் – எந்தப் பொழுதிலும்; வல் அறிதல் – விரைந்து அறிவது; வேந்தன் தொழில் – மன்னனின் தொழில் ஆகும்.

எல்லோரிடத்திலும் நிகழும் செயல்கள் அனைத்தையும் எந்தப் பொழுதிலும் விரைந்து அறிய வேண்டியது மன்னனின் தொழில் ஆகும்.

**3. ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்தது இல்.**

ஒற்றினான் – ஒற்றினால்; ஒற்றி – எல்லா நிகழ்வுகளையும் அறிந்து; பொருள் தெரியா மன்னவன் – அதன் பயனை ஆராயாத மன்னவன்; கொற்றம் கொளக்கிடந்தது இல் – வெற்றி அடைவதற்கு வழியே இல்லை.

ஒற்றினால் எல்லா நிகழ்வுகளையும் அறிந்து அதன் பயனை ஆராயாத மன்னவன் வெற்றி அடைவதற்கு வழியே இல்லை.

ஒற்றையும் அறிந்து அதன் பயனையும் மன்னவன் அறிதல் வேண்டும்; இல்லையேல் வெற்றி இல்லை.

**4. வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று.**

வினைசெய்வார் – மன்னனுக்கு வேண்டிய செயல் செய்பவர்; தம் சுற்றம் – அவனது சுற்றத்தார்; வேண்டாதார் – அவனது பகைவர்கள்; என்றாங்கு – என்று சொல்லப்பட்ட; அனைவரையும் ஆராய்வது ஒற்று – அனைவரையும் ஆராய்ந்து வருபவனே ஒற்றன் ஆவான்.

மன்னனுக்கு வேண்டிய செயல் செய்பவர், அவனது சுற்றத்தார், அவனது பகைவர்கள் என்று சொல்லப்பட்ட அனைவரையும் ஆராய்ந்து வருபவனே ஒற்றன் ஆவான்.

**5. கடாஅ உருவொடு கண்அஞ்சாது யாண்டும்**
**உகாஅமை வல்லதே ஒற்று.**

கடாஅ உருவொடு – ஐயப்படாத உருவத்தோடு; கண் அஞ்சாது – கண்ணில் அச்சம் கொள்ளாமல்; யாண்டும் – எந்நிலையிலும்; உகாஅமை வல்லதே ஒற்று – மனம் கொண்டதை வெளிப்படுத்தாமை வல்லவனே ஒற்றனாவான்.

ஐயப்படாத உருவத்தோடு கண்ணில் அச்சம் கொள்ளாமல் எந்நிலையிலும் மனம் கொண்டதை வெளிப்படுத்தாமையில் வல்லவனே ஒற்றனாவான்.

**6. துறந்தார் படிவத்தார் ஆகி இறந்து ஆராய்ந்து**
**என்செயினும் சோர்விலது ஒற்று.**

துறந்தார் படிவத்தார் ஆகி – முற்றும் துறந்த துறவியாகவும் விரதம் கொண்ட வடிவினராகவும் ஆகி; இறந்து ஆராய்ந்து – கடந்து ஆராய்ந்து அறிந்து; என்செயினும் – செல்லுமிடத்து உள்ளோர் என்ன செய்தாலும்; சோர்விலது ஒற்று – தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான்.

முற்றும் துறந்த துறவியாகவும் விரதம் கொண்ட வடிவினராகவும் ஆகிச் செல்லுமிடத்து உள்ளோர் என்ன செய்தாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான்.

**7. மறைந்தவை கேட்கஅற்று ஆகி அறிந்தவை**
**ஐயப்பாடு இல்லதே ஒற்று.**

மறைந்தவை கேட்க அற்று ஆகி – ஒற்றறியச் சென்ற இடத்தில் மறைந்துள்ள செயல்களைக் கேட்டு அறியும் வல்லவனாய்;

அறிந்தவை - அவ்வாறு அறிந்தவற்றை; ஐயப்பாடு இல்லதே ஒற்று - ஐயம் கொள்ளாது இருப்பவனே ஒற்றனாவான்.

ஒற்றறியச் சென்ற இடத்தில் மறைந்துள்ள செயல்களைக் கேட்டு அறியும் வல்லவனாய் அவ்வாறு அறிந்தவற்றை ஐயம் கொள்ளாது இருப்பவனே ஒற்றனாவான்.

**8. ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றும்ஓர்**
**ஒற்றினால் ஒற்றிக் கொளல்.**

ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் - ஒற்றன் ஒற்றறிந்த செய்திகளை; மற்றும் ஓர் ஒற்றினால் - மற்றும் ஓர் ஒற்றனால்; ஒற்றிக் கொளல் - ஒற்று அறிந்து கொள்ள வேண்டும்.

ஓர் ஒற்றன் ஒற்றறிந்த செய்திகளை மற்றும் ஓர் ஒற்றனால் ஒற்றறிந்து கொள்ள வேண்டும்.

**9. ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர்**
**சொல்தொக்க தேறப் படும்.**

ஒற்று ஒற்று உணராமை ஆள்க - ஓர் ஒற்றனை மற்றோர் ஒற்றன் அறியாமல் ஆள வேண்டும்; உடன்மூவர் - அவ்வாறு செயல்படும் ஒற்றர் மூவருடன்; சொல்தொக்க - கேட்டறிந்த சொல்லைத் தொகுத்து; தேறப்படும் - தெளிய வேண்டும்.

ஓர் ஒற்றனை மற்றோர் ஒற்றன் அறியாமல் ஆளவேண்டும்; அவ்வாறு செயல்படும் ஒற்றர் மூவருடன் கேட்டறிந்த சொல்லைத் தொகுத்துத் தெளிய வேண்டும்.

**10. சிறப்பு அறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்**
**புறப்படுத்தான் ஆகும் மறை.**

சிறப்பு அறிய - ஒற்றனுக்குச் செய்யும் சிறப்பினைப் பிறர் அறியுமாறு; ஒற்றின்கண் - ஒற்றனுக்கு; செய்யற்க - செய்யக்கூடாது; செய்யின் - அவ்வாறு செய்தால்; புறப்படுத்தான் ஆகும் மறை - மறைந்திருந்த செய்தியை வெளிப்படுத்தியதாகி விடும்.

ஒற்றனுக்குச் செய்யும் சிறப்பினைப் பிறர் அறியுமாறு செய்யக் கூடாது; அவ்வாறு செய்தால் மறைந்திருந்த செய்தியைத் தானே வெளிப்படுத்தியதாகி விடும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### சங்கப்பலகை தந்தது

ஆலவாயில் வங்கிய சேகர பாண்டியன் ஆட்சி புரிந்து வருகின்ற நாளிலே காசி க்ஷேத்திரத்திலே பிரம்மா பத்து அசுவமேத யாகங்களை வேத முறைப்படி புரிந்தார். மறுநாள் நீராடுவதற்காக, கங்கா நதியை நோக்கி, தமது மூன்று மனைவிமார்களான சரஸ்வதி, சாவித்திரி, காயத்திரியுடன் சென்றார். அப்படிச் செல்லும் வழியிலே, வான வீதியிலேயே வித்தியாதர மாதொருத்தி கானம் பாடுவதைக்கேட்டு அதிலே மனதைச் செலுத்தியதாலே, சற்றே தயங்கி நின்றாள் சரசுவதி. அதற்குள்ளாக, கங்கைக் கரையை அடைந்து விட்டார் பிரம்மதேவர். வாணி வரக் காலம் தாழ்ந்ததாலே தமது இரு மனைவிகளோடு நீராடிக் கரையேறினார். "என்னை விட்டுவிட்டு நீராடியது எப்படி ? என்று வினாவிக்கொண்டே வந்தாள் கோபமடைந்த சரசுவதிதேவி. "குற்றம் உன்மேல் உள்ள போது எம்மை எதற்காகக் கோபிக்கிறாய் ? வீணாக என்னைக் கோபித்த குற்றத்தாலே நீ எண்ணற்ற மனிதப் பிறவி எடுத்துக் குற்றம் நீங்குவாய்" என்று சாபமிட்டார் பிரம்மா. சாபம் பெற்ற சரசுவதி பெரிதும் பயந்தாள். "மனிதப் பிறப்பின் துன்பங்களுக்கு ஆளாகாத தேவரீரது மனைவியான எனக்கு எண்ணற்ற பிறவியா வேண்டும் ?" என்று பணிவோடு வினாவினாள்.

சினம் தணிந்த பிரம்ம தேவரும் சிந்தித்தார். "வாணி! உன்னுடைய வடிவமாகிய முதலெழுத்து ஐம்பத்து ஒன்றினுள்ளே விளங்குகிற ஆகாரம் முதலாக ஹாகாரம் ஈறாக நாற்பத்தெட்டு எழுத்துக்களும் நாற்பத்தெட்டுப் புலவர்களாகி, பல்வேறு வருணங்களிலே தோன்றக் கடவனவாக. அவ்வெழுத்துக்குள் எல்லாவற்றிலும் உயர்ந்து நின்று உயிர் தரும் தனி முதலான அகரத்திற்குத் தலைமையான கடவுள் சோமசுந்தரப் பெருமானே யாவார்! ஆதலால் அவரும் ஒரு புலவராகிப் புலவர் கூட்டத்தை நாற்பத்தொன்பதாக ஆக்கி விடுவார். அந்தப் புலவர்களது உள்ளத்திலே புகுந்து கொண்டு அறிவைத் தோற்றுவித்து அருள்வாய்" என்று கூறினார்.

நான்முகனாரின் ஆணையின் வண்ணம் அகார முதலிட்ட நாற்பத்தெட்டெழுத்துக்களும் வெவ்வேறு இனத்திலே மக்களாகப்

பிறந்தன. பிறந்த அக்ஷரக் குழந்தைகள் வயதிலே வளர்ந்தன. வயது ஏற ஏற அறிவும் புலமையும் பெருகின. பல கலைகளின் வகைகளை அவர்கள் தெரிந்து கொண்டார்கள். சமஸ்கிருத பாஷையையும், மற்றும் பதினெட்டு பாஷைகளையும் ஆராய்ந்து அறிந்தனர். தமிழ் மொழியிலே தலைமைப் புலமையைப் பெற்றனர். பொன்மாலை ரத்தின மாலைகள் தவிர்த்து உருத்திராட்ச மாலையும் தரித்தனர். வெள்ளிய திருநீறு அணிந்தனர். சிவபூஜை செய்யும்போது பாமாலையும் பூமாலையும் சூட்டி மகிழ்ந்தனர். பெருந் தகுதியும், தகைமையும், தன்மையும் ஒருங்கே பெற்றுத் துலங்கிய புலவர் நாற்பத்தெட்டுப் பேர்களும் நாடு முழுவதும் சுற்றி வந்தனர். தங்கள் புலமையின் வலிமையால் அங்கங்கே இருந்தவர்களை வென்றனர். பின்னர் தண்பொருநையாற்றால் வளம் கொழிக்கும் பாண்டி நன்னாட்டிற்கு வந்து சேர்ந்தனர். பாண்டிய ராஜ தானியாகிய ஆலவாயம்பதியை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

அச்சமயம் கலாந்தமும் ஞானமூர்த்தியும் ஆலவாயப்பனுமாகிய சோமசுந்தரப் பெருமான் தமது இச்சா சக்தியால் ஒரு புலவர் வேடம் கொண்டருளினார். நாற்பத்தெட்டுப் புலவர்களின் முன்னே சென்றார். "நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டருளினார். "நாங்கள் புலவர்கள், தன்னை வந்தடைந்தவரது பாபம் போக்கும் தண்பொருநைப் பாண்டிப் பகுதியிலிருந்து வருகிறோம்" என்றார்கள் புலவர்கள். அது கேட்ட புலவர் பெருமான், "இனிய தமிழ்மொழி பயிலும் ஆலவாய்ப் பயிலுறையும் சோமசுந்தரப் பெருமானைக் கண்டு வணங்க வேண்டும் இப்பொழுதே வருவீர்களாக", என்று பணித்தருளினார். புலவர்கள் அனைவரும் சோமசுந்தரக் கடவுளை நேரிலே தரிசித்தவர்போல மட்டற்ற மகிழ்ச்சி கொண்டனர். கடவுட் புலவரும் அவர்களையெல்லாம் ஆலவாயம்பதிக்கு அழைத்துச் சென்றார். திருக்கோவிலடைந்து பெருமானை வழிபடச் செய்து தான் மறைந்தருளினார். புலவர்கள் அனைவரும் வியப்பெய்தி, "இது சிவபெருமானின் அருட்செயலே!" என்று தெளிவடைந்து சோமசுந்தரப் பெருமானை வகைவகையான செய்யுட்களாலே தோத்திரம் செய்து வணங்கினர்.

பின்னர் வங்கிய சேகர பாண்டியனது சபையை அடைந்து அவனைக் கண்டனர். தன்னிடம் வந்த நாற்பத்தெட்டுப் புலவர்களையும் கண்ட வழுதியும் அவர்களது அறவொழுக்கத்தையும் கல்வியின் மேம்பாட்டையும் புலமையின் உயர்வையும் ஓர்ந்து, "இவர்களே ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்; அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்பன பொருந்திய ஆன்றோர்கள்" என்று தெரிந்தான். அவர்கள் அனைவரையும் ஏற்று உபசரித்து வரிசைகள் பல வழங்கினான். சோமசுந்தரப் பெருமானின் திருக்கோவிலுக்கு வடமேற்கே சங்க மண்டபம் என ஒன்று நிறுவி அதிலே புலவர்களை இருக்கச் செய்தான்.

புதுப் புலவர்கள் பெற்ற சிறப்புக்களைக் கண்டு பழைய புலவர்கள் மனம் புழுங்கினர். சங்கப் புலவர்களோடு வாதமிட்டுத் தங்கள் ஆற்றலும் செருக்கும் கெட அவமானமடைந்து சென்றனர். அயல் நாட்டிலிருந்து வந்த புலவர் பலரும் வாதமிட்டுத் தோற்றுப் போயினர்; சங்கப் புலவர்கள் வெற்றிபெற்று விளங்கினர்.

சங்கப் புலவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு நாள் திருக்கோயில் சென்று சோமசுந்தரப் பெருமானை முறைப்படி துதித்து வணங்கினர். "எம்பெருமானே! பலர் தொடர்ந்தாற்போல வந்து வந்து எங்களோடு வாதம் புரிகின்றனர். ஆதலால், அவர்களது புலமையைச் சீர் தூக்கி அளக்கும் கருவியாகச் சங்கப் பலகையொன்று எங்களுக்குத் தந்தருள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தனர். தாமே வலிய வந்து பாணபத்திரனுக்குப் பொற்பலகை ஈந்த பெருவள்ளலான சிவபெருமான் புலவர்கள் வலிய வந்து வேண்டும் போது அருளாமல் இருப்பாரா? ஆதலால் பெருமானே புலவர் உருவம் கொண்டு ஒரு பலகையையும் கைக் கொண்டு எழுந்தருளினார். "புலவர்களே! இந்தப் பலகை இரண்டு சாண் சதுர அளவுள்ளது; சந்திரனைக் காட்டிலும் வெண்மையானது; அறிவைக் காட்டிலும் தூய்மையானது; மந்திரசக்தி கொண்டது. உம்மைப் போன்ற அறிவிலே சிறந்தவர்கள் வந்தால் ஒவ்வொரு முழமாக வளர்ந்து இடம் தரும் ஆற்றல் உடையது. இப்பலகை உங்களுக்கு, பிறர் திறமை அளக்கும் கருவியாக அமையும்," என்று இயம்பி அருமைப் பலகை தந்தருளினார்.

இறைவன் அருளிய அப்பலகையைப் பரிவுடன் பெற்றுக்கொண்ட சங்கப் புலவர்கள் திருக்கோவிலில் பிரதட்சிணம் செய்து கொண்டு தமது மண்டபம் சேர்ந்தனர். திருப்பலகையைப் பாங்கான இடத்திலே அமைத்துப் பூமாலை சூட்டினர். பன்னீர் தெளித்துச் சந்தன குங்குமம் சாத்தினர். தூப தீபம் காட்டிப் பூசனை செய்து வணங்கினார்கள். பின்னர் சங்கப் பலகையின்மேல் முதன் முதலாக நக்கீரன் ஏறினார் அடுத்து கபிலனும் பாணனும் ஏறினர். ஏனைய புலவர்களும் ஒருவர்பின் ஒருவராகச் சங்கப் பலகை ஏறி ஒன்றாக அமர்ந்தனர். சோமசுந்தரப் பெருமான் அருளிய சிறு பலகையொன்றே ஒவ்வொரு புலவருக்கும் ஒவ்வொரு முழமாகப் பெருகி வளர்ந்து எல்லாருக்கும் இடம் அளித்தது.

தெய்வப் பலகை பெற்ற சங்கப் புலவர்கள் பெருமையிலே சிறந்து விளங்கினர். நாற்பத்தெட்டுப் புலவர்களும் தமது சிறந்த புலமையினாலே கணக்கில் அடங்காத தூய தமிழ்ப் பாடல்களை இயற்றித் தத்தம் போக்குப்படி இனிதே இருந்தனர். சொல்வளம், பொருளழகு கொண்ட அந்தப் பாடல்கள் எல்லாம் ஏறக்குறையக் குறித்துக் காட்டிய பொருள்களிலே ஒற்றுமை உடையனவாகியிருந்தன. அதன் காரணமாக எந்தப் பாடலை யார் பாடியது என்று தெளிய வகையில்லாமல் இருந்தது. புலவர்கள் தமக்குள் ஆச்சரியமடைந்து "இது என் பாடல், அது உமது பாடல்" என்று மாறுபாடு கொண்டு மயங்கினர்.

அதுசமயம் சோமசுந்தரப் பெருமான் புலவர் வடிவம் கொண்டு அவர்கள் முன்பு தோன்றினார். அந்த அருட்பெரும் தெய்வப்புலவரைச் சங்கப் புலவர்கள் வரவேற்றார்கள். புலவர் பெருமான் அவர்களைப் பார்த்து, "புலவீர் ! மயக்கம் தரும் உங்களது செய்யுட்களைக் கொண்டு வருவீர்களாக" என்று அருளிச் சொன்னார். புலவர்களும் தம்மை மயக்கிய பாக்களைக் கொணர்ந்து தேவப் புலவர் திருமுன் வைத்து நின்றனர். அப்புலவரும் ஒவ்வொரு பாடலாகப் படித்துப் பார்த்து ஆராய்ந்து "இது உம்முடையது; இது உம்முடையது" என்று சொல்லி அவரவர்கள் ஏற்று மகிழ்ந்துகொள்ளும் வண்ணம் ஈந்தருளினார். தங்கள் தங்கட்குரிய பாடல்களைப் பெற்ற புலவர் நாற்பத்தெட்டுப்

பேர்களும் புலவர்பெருமானின் தன்மையைக் கண்டு வியந்து களிகூர்ந்து போற்றினர். "புலவர் பெருந்தகையே! தாங்களும் எங்களோடு ஒரு புலவராய் இருந்தருள்க" என்று வேண்டினர், சங்கப் பலகையில் அவரையும் அமர்த்தினர். தெய்வப் புலவரும் தலைமை ஏற்று நடுநாயகமாக வீற்றிருந்து அருளினார்.

சங்கமிருந்த தமிழனாகிய சிவபெருமானைத் தலைவராகக் கொண்ட புலவர்கள் செவ்விய மதுரம் சேர்த்த ஒண்தீந்தமிழ்ப் பாடல்கள் பல செய்து அருமை நூல்கள் பல சேர்த்தனர்.

பல நாட்கள் கழிந்தன. வங்கிய சேகர பாண்டியன் வயதிலும், அழகிலும், வீரத்திலும், அறிவிலும், ஆற்றலிலும் நன்கு விளங்கிய தனது மைந்தன் வங்கிய சூடாமணிக்குக் குடை, முடி, கோல் தந்து சிவலோகம் புகுந்தான்.

*(தொடரும்...)*

---

**27.02.2021** அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில் ஆசிரியை **பா.தென்றல்** சிலப்பதிகாரம் - வஞ்சினமாலை பற்றிச் சொற்பொழிவாற்றினார்.



**19.03.2021** மற்றும் **20.03.2021** ஆகிய இரு நாள்கள் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் தமிழ்த் துறை சார்பில் **நகரத்தார் வாழ்வும் பணியும்** என்னும் தலைப்பில் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடைபெற்றது.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்